9th November 1961] [Deputy Speaker]

November 14th
November 15th; and
November 16th—*cont.*

2. The Madras City Municipal (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 35 of 1961).
3. The Madras Hill Stations (Preservation of Trees) Amendment Bill, 1961.
4. The Madras Private Forests (Assumption of Management) Bill, 1961.
5. The Madras Catering Establishments (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 40 of 1961).
6. The Madras Industrial Establishments (National and Festival Holidays) (Amendment) Bill, 1961 (L.A. Bill No. 41 of 1961).
7. The Madras Minor Inams Abolition and Conversion into Ryotwari) Bill, 1961 (L.A. Bill No. 48 of 1961).
8. The Madras Lease-Holds (Abolition and Conversion into Ryotwari) Bill, 1961 (L.A. Bill No. 49 of 1961).
9. The Madras Iruwaram Inam Estates (Abolition and Conversion into Ryotwari) Bill, 1961 (L.A. Bill No. 50 of 1961).

The House will sit, if necessary on the 17th November 1961 also.

The House will now rise for lunch and meet again at 3 p.m.

The House then rose.

[**After lunch 3 p m.**]

IV. GOVERNMENT MOTION—*cont.*

(2) THE THIRD FIVE-YEAR PLAN—MADRAS STATE.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

"That the Third Five-Year Plan for the State of Madras be taken into consideration."

கனம் உதவி சபா நாயகர் அவர்களே, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் நம்முடைய நாடு முன்னேறுவதற்காக உருவாக்கப் பட்டு, சென்னை அரசாங்கத்தை, தமிழ் நாடு அரசாங்கத்தைப் பொறுத்த வரை, எந்தெந்தத் திட்டங்களை எந்தெந்த அளவுக்கு நிறைவேற்ற வேண்டுமென்று முடிவாகியிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி நம் சபையிலே இதற்கு முன்பே விவாதம் செய்து, அப்பொழுது நம்முடைய பல கருத்துக்களைச் சொல்லி, எந்த எந்த திட்டங்களை எடுக்க வேண்டுமென்று அப்பொழுதே

[Sri C. Subramaniam] [9th November 1961

ஓரளவுக்கு நம் கருத்துக்களைக் கூறினோம். அதற்கு பிற்பாடு மற்ற எல்லா இராச்சியங்களிலும் அவர்கள் சட்ட சபைகளிலும் அவர்கள் சொன்ன கருத்துக்களையும் ஏற்றுக்கொண்டு, எந்த அளவுக்கு மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் இருக்க வேண்டும் என்று முடிவு எடுக்க வேண்டியது பொதுவாக நாஷனல் டெவலப்மெண்ட் கவுன்சிலுக்கு ஏற்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர்கள் அறிவார்கள், நாஷனல் டெவலப்மெண்ட் கவுன்சிலில் எல்லா இராச்சிய முதன் மந்திரிகளும் இடம் பெற்று இருக்கிறார்கள் என்பது. அதோடு, ப்ளானிங் கமிஷன் அங்கத்தினர்களும், மற்றும் மத்திய சர்க்கார் முக்கிய மந்திரிகளும் இடம் பெற்று இருக்கும் ஒரு சபை. அந்த சபை நாடு முழுவதிற்கும் எந்த முறையிலே திட்டம் தீட்ட வேண்டும் என்று நிர்ணயிக்க வேண்டிய பொறுப்புள்ள சபையாக அது அமைந்திருக்கிறது.

ப்ளானிங் கமிஷனுடைய வேலை, அதனுடைய பணி, ஆலோசனை சொல்லக் கூடியது. அந்த அளவுக்குத்தான் ப்ளானிங் கமிஷனுக்கு அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறதே ஒழிய, ப்ளானிங் கமிஷனுக்கு திட்ட வட்டமாக இந்தக் காரியத்தைத்தான் செய்யவேண்டுமென்று சொல்லும் அதிகாரம் கிடையாது. ஆனால், இப்பொழுது இருக்கும் ப்ளானிங் கமிஷனுக்கு ஒரு முக்கியத்துவம் என்னவென்றால், நம் பிரதம மந்திரி ப்ளானிங் கமிஷனுக்கு தலைவராக இருக்கிறார்கள். அதன் காரணத்தினால், ப்ளானிங் கமிஷன் சொல்லும் ஆலோசனைகளுக்கு ஒரு தனி மதிப்பு இருக்கிறது என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். இருப்பினும், ப்ளானிங் கமிஷனுக்கு அதிகார பூர்வமாக இன்னின்ன காரியங்களை, திட்டங்களை நிறைவேற்ற வேண்டும் என்று சொல்லக் கூடிய எந்த விதமான அதிகாரமும் கிடையாது; பொறுப்பும் கிடையாது அவர்களுக்கு. அவர்கள் ஆலோசனை சொல்லக் கடமைப் பட்டிருக்கிறார்கள். அந்த ஆலோசனைகளை மற்ற எல்லா இராச்சிய சர்க்கார்களும், மத்திய சர்க்காரும் பரிசீலனை செய்து ஒரு முடிவு எடுப்பதுடன், எல்லாவற்றிற்கும் மேலாக, தேசிய அபிவிருத்தி கவுன்சிலில், எல்லா இராச்சியங்களிலிருந்தும் வரும் பிரதிநிதிகள், மத்திய சர்க்கார் பிரதிநிதிகள், இவர்கள் எல்லாரும் உட்கார்ந்து ஒரு முடிவு செய்ய வேண்டுமென்ற முறையிலே அமைப்பு இப்பொழுது ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. பல சமயங்களிலே நமக்கும் கூட தோன்றும்: ஏன் இந்த ப்ளானிங் கமிஷனுக்கு இவ்வளவு அதிகாரம் கொடுக்க வேண்டும் என்று. அப்படி நமக்கும் கூட ஒரு குழப்பம், குழப்பமான நிலைமை ஏற்படுகிறது. அதற்கு ஒரு காரணம், ப்ளானிங் கமிஷனில் இருப்பவர்கள்கூட, ஒரு சிலர் தங்களுக்கு ஏதோ அதிகாரம் இருப்பதாக நினைத்துக் கொண்டு பேசுவதுதான் என்பது என் கருத்து. ப்ளானிங் கமிஷனைப் பொறுத்த வரையில், அது ஒரு ஆலோசனைக்குழு என்று அவர்கள் உணரவேண்டும். அந்த முறையிலே, ஆலோசனைக்குழு அங்கத்தினர்கள் நடந்து கொண்டால், நாட்டிலே இந்தக் குழப்பத்திற்கு இடம் இராது. சமீபத்திலே கூட, ப்ளானிங் கமிஷன் அங்கத்தினர் ஒருவர் நாம் இங்கே கொண்டுவந்த நிலச் சீர்திருத்த மசோதாவைப் பற்றிப் பேசியிருந்தார்கள். (குறுக்கீடு) ஆம், மைசூர்

9th November 1961] [Sri C. Subramaniam]

சட்டத்தைப் பற்றிப் பேசியிருந்தார்கள். அது உண்மையிலேயே வருந்தத்தக்கது. அது ப்ளானிங் கமிஷனுக்கே சரியானதல்ல. அந்தக் குழு அங்கத்தினர்கள் எந்த அளவுக்கு மௌனமாக இருக்கிறார்களோ, அந்த அளவுக்கு அவர்கள் தங்கள் பணியைச் செய்ய தகுதியுள்ளவர்களாக இருப்பார்கள்; பேசுவதற்காகவல்ல, கொள்கைகளை வகுப்பதற்காக அல்ல அந்தக் குழு; அது ஒரு ஆலோசனைக் குழு என்பதை அவர்களும் உணரவேண்டும். இம்மாதிரிப் பேச்சுக்கள் வருவதால்தான் மற்றவர்களும், ஏதோ கடைசியில் முடிவு செய்ய வேண்டியது ப்ளானிங் கமிஷன் போல் இருக்கிறது என்று பலர் நினைக்க இடம் ஏற்படுகிறது. அம்மாதிரிச் சூழ்நிலை ஏற்படுவதை தவிர்க்க வேண்டியது மிகவும் அவசியம் என்று நான் இன்றைக்கு வலியுறுத்த விரும்புகிறேன்.

அரசியல் அமைப்பில், அரசியல் சட்டத்திலே, மத்திய சர்க்காரைப் பொறுத்த வரையில், பார்லிமெண்டுதான் எல்லாவிதமான அதிகாரத்திற்கும் பொறுப்பு பெற்று இருக்கிறது. அதே மாதிரி, நம் ராஜ்யத்தைப் பொறுத்த வரையில், இந்த சட்ட சபைதான்—மேல் சபையையும் சேர்த்து என்று வைத்துக்கொள்ளலாம்—நம் சட்ட சபை அமைப்பு எல்லா அதிகாரத்தையும் பெற்று இருக்கிறது. இதிலே நாம் இன்னொருவர் ஆலோசனையை ஏற்றுக் கொள்ளலாம், ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம். சட்ட சபை பிரதிநிதிகள் என்ற முறையில், மந்திரி சபைக்கு பொறுப்பு, அதிகாரம் இருக்கிறது. ஆனால், அந்த அதிகாரம் இந்த சட்ட சபை கொடுக்கும் அதிகாரம் தான். ஆகையினால், அரசாங்கங்களுக்கு, அது ராஜ்ய சர்க்கார்களானாலும் சரி, மத்திய சர்க்கார் ஆனாலும் சரி, ஆலோசனை கொடுக்க வேண்டிய பொறுப்பு மட்டும் திட்ட கமிஷனுக்கு உண்டே தவிர, அதற்கு மேல் இல்லை. அதை நாமும் உணரவேண்டும்; திட்ட கமிஷனும் உணரவேண்டும் என்று நாம் இன்றைக்கு வலியுறுத்த வேண்டியிருக்கிறது. ஏனென்றால், சில இடங்களிலே, ப்ளானிங் கமிஷன் ஒரு 'சூபர் காபினட்' என்ற முறையிலே அதைப்பற்றி குறை சொல்லும் முறையிலே சொல்ல முன் வந்திருப்பது தவறான சூழ்நிலை காரணமாக ஏற்பட்டிருக்கிறது. அம்மாதிரி எண்ணத்திற்கு நடைமுறையிலோ அல்லது சட்ட ரீதியாகவோ எந்த ஆதாரமும் கிடையாது என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அதற்கு அடுத்தபடியாக, இந்த மாதிரி திட்டக் கமிஷனே அவசியமா, திட்டம் போடுவதே அவசியமா என்பது பற்றியெல்லாம் கருத்து வேறுபாடு எழுந்திருக்கிறது. நாட்டிலே திட்டம் போடுவது என்று சொல்லுவது இன்றைக்கு ஏற்பட்டதல்ல. திட்ட அடிப்படையிலே நாம் நாட்டை முன்னேற்றம் அடையச் செய்ய வேண்டும் என்று நமக்கு சுதந்திரம் வருவதற்கு முன்பே, அப்பொழுது நாட்டின் சுதந்திரத்திற்குத் தனிப்பிரதிநிதியாக இருந்த காங்கிரஸ் மகாசபை, அப்பொழுதே தீர்மானித்திருக்கிறது; திட்ட அடிப்படையில் பல காரியங்களைச் செய்து நாம் முன்னேற வேண்டும் என்று அன்றே தீர்மானித்திருக்கிறோம். அது மற்ற நாடுகளின், சமுதாயங்களின் அனுபவத்தை ஒத்திருக்கிறது. திட்ட

[Sri C. Subramaniam] [9th November 1961

அடிப்படையில் அபிவிருத்தி யடைய வேண்டும் என்று எடுத்துக் கொண்டது, முதன் முதலிலே கம்யூனிஸ்டு நாடுகளிலே, கம்யூனிஸ்ட் அடிப்படையில் இருக்கும் நாடுகளிலே. அதன் காரணமாகத்தான் இந்த விதமான வாதம் ஏற்பட்டது. அப்படிபட்ட வாதம் தவறான கருத்துக்கொண்ட வாதம். அது, திட்டம் போடுவது என்பது கம்யூனிச அடிப்படையில் இருக்கக்கூடிய திட்டம் என்று சொல்லக்கூடிய வாதம். அப்படி நினைப்பது தவறு. ஆகவே நாம் திட்டம் போடக்கூடிய காலத்தில் எந்த முறையில் திட்டம் போடுகிறோம் என்று பார்க்க வேண்டும். நாம் எந்த முறையில் இயங்கி வருகிறோம் என்று பார்க்க வேண்டும். அப்படி கம்யூனிஸ அடிப்படையில் திட்டம் போடுவதாக இருந்தால் இந்த சட்டசபைக்கு இடமே இல்லை. இதுதான் நாம் புரிந்து கொள்ளக் கூடிய விஷயம். சமீபத்தில் வரக்கூடிய தேர்தலுக்கு இடமில்லை, பார்லிமெண்டுக்கு இடம் இல்லை. பார்லிமெண்டுக்கு எலெக்ஷன் தேவையில்லை. இன்றைக்கு பரிபூரண அதிகாரம் மக்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகிற பிரதிநிதிகள் எந்த முடிவு எடுக்கிறார்களோ அதுதான் நடத்திச் செல்லப்பட வேண்டும். அந்த அடிப்படையில்தான் இன்றைக்கு அரசியல் அமைப்பு அமைந்திருக்கிறது. ராஜ்ய சட்டசபையாக இருந்தாலும் சரி பார்லிமெண்டாக இருந்தாலும் சரி, தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் முடிவு செய்யப்பட்டதுதான் நடை முறைக்கு வரவேண்டியதாக இருக்கிறது. பார்லிமெண்டாக இருந்தாலும் சரி ராஜ்ய சட்டசபையாக இருந்தாலும் சரி நாடு முன்னேற்றமடைவதற்கு திட்ட அடிப்படையில் நாம் நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. எந்த முடிவுக்கு வருகிறோமோ அந்த அளவுக்கும் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. அதன் அடிப்படையில் பல்வேறு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டியதாக இருக்கிறது. ஆகவே திட்டம் ஆரம்பித்தது கம்யூனிஸ்ட் நாடுகள்தான் என்பதனால் அந்த கம்யூனிஸ்ட் அடிப்படையில் தான் ராஜ்யம் நடைபெற்று வருகிறது என்று சொல்வது சரியல்ல. நாமும் திட்டம் போடுவதால் இந்த ராஜ்யம் கம்யூனிஸ்ட் அடிப்படையில் இயங்கி வருகிறது என்று சொல்வதற்கு இல்லை. சுண்ணாம்பும் வெள்ளையாக இருக்கிறது வெண்ணெயும் வெள்ளையாக இருக்கிறது என்பதனால் இரண்டும் ஒன்று என்று சொல்வதாக இருக்கிறது. இப்பொழுது சொல்லக்கூடிய வாதம் சரியல்ல என்பதை நான் தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்கிறேன். திட்டம் வகுக்கப்படுகிறது. அந்த திட்டத்தை எந்த அளவுக்கு நிறைவேற்ற வேண்டும் என்பதை பார்லிமெண்டும் ராஜ்ய சட்டசபைகளும்தான் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அதுவும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால்தான் முடிவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. அந்த அதிகாரம் சட்டசபைக்குத்தான் இருக்கிறது. போடப்பட்ட திட்டத்தை நிறைவேற்றுவதாக இருந்தாலும் அதை மாற்றி அமைக்க வேண்டியதாக இருந்தாலும் சரி சட்டசபைக்குத்தான் அப்படிப்பட்ட அதிகாரம் இருக்கிறது. பார்லிமெண்டுக்குத்தான் அந்த அதிகாரம் இருக்கிறது. பார்லிமெண்டுக்கும் சட்டசபைக்கும் பிரதிநிதிகளை

9th November 1961] [Sri C. Subramaniam]

தேர்ந்தெடுக்கக்கூடிய அதிகாரம் மக்களுக்குத்தான் இருக்கிறது. அந்த முறையில்தான் நம்முடைய அரசியல் அமைப்பு இருக்கிறது. அதுதான் ஜனநாயக அமைப்பு என்பதைதான் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மக்களால் கொடுக்கப்பட்ட அப்படிப்பட்ட அதிகாரத்தை ஒருவராலும் அசைக்கவே முடியாது. எந்த கட்சியாக இருந்தாலும் சரி அந்தக் கட்சிக்கு அதிகாரம் கொடுக்கும் போது ஜனநாயக அடிப்படையில் இப்படிப்பட்ட அதிகாரம்தான் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில்தான் நம்முடைய அரசாங்கம் நடைபெற்று வருகிறது என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்கிறேன். இப்படி திட்டம் போடுவது கம்யூனிஸ்ட் நாட்டின் அடிப்படையில் நடவடிக்கைகள் எடுப்பதாக இருக்கிறது என்று சொல்வது இதற்கு முரண்பாடாக இருக்கிறது. இப்பொழுது இருக்கக்கூடிய கருத்துக்கு எதிராக இருக்கிறது. நாம் போடக்கூடிய திட்டங்களையெல்லாம் கிராம அடிப்படையில் வட்டார அடிப்படையில் அதை எந்த அளவுக்கு நிறைவேற்ற வேண்டுமோ அந்த அளவுக்கு நிறைவேற்றுவதற்கு நாம் நடவடிக்கை எடுத்துக்கொண்டு வருகிறோம். இப்படிப்பட்ட ஒரு அதிகாரத்தை மத்திய கேந்திரமாக இருக்கக்கூடிய ஒரு ஸ்தாபனத்திற்கு மட்டும் விட்டு விடவில்லை. இன்றைக்கு இந்தச் சட்டசபை ஒரு முக்கியமான திட்டத்தை எடுத்துக்கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு கிராமத்திலும் மக்களுக்கு அதிகாரத்தைக் கொடுக்கும் அளவில் கிராம பஞ்சாயத்துக்களை அமைத்து இருக்கிறது. அந்த வட்டாரத்தைச் சுற்றியுள்ள கிராமங்களுக்கு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் என்று அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த பஞ்சாயத்துக்களுக்கு மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டு கிராம ஆட்சியை நடத்துவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அப்படி பல பஞ்சாயத்துக்கள் கொண்டது ஒரு பஞ்சாயத்து யூனியன் என்று அமைக்கப்பட்டிருக்கிறது. அவைகளுக்கு வேண்டிய அதிகாரமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்களே தங்களுடைய வேலைகளைச் செய்து கொள்ளலாம். அவர்களே திட்டங்களை அமைத்துக்கொள்ளலாம் என்றும் போடப்பட்ட திட்டங்களை அவர்களே நிறைவேற்றிக்கொள்ளலாம் என்றும் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு அதிகாரம் அந்த பஞ்சாயத்துக்களுக்கும் பஞ்சாயத்து யூனியன்களுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கம்யூனிஸ அமைப்பில் இருந்தால் இப்படிப்பட்ட அதிகாரம் கொடுக்காமல் குவியல் முறையில் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கும். ஆனால் இப்படிப்பட்ட பஞ்சாயத்து அமைப்பில் பரவல் முறையில்தான் அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. கிராமத்திலுள்ள எல்லோரும் பூரண பங்கெடுத்துக்கொள்வதற்கு வேண்டிய அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. போடப்படும் திட்டங்களை நிறைவேற்றக்கூடிய பொறுப்பு அவர்களுக்கே இருக்க வேண்டும் என்றும் எல்லா நடவடிக்கைகளிலும் அவர்களும் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட அமைப்புக்குப் பிறப்பட்டும் கம்யூனிஸ பாதையில் போய்க் கொண்டிருக்கிறோம் என்று சொன்னால் அது ஒப்புக்கொள்ளக்

[Sri C. Subramaniam] [9th November 1961

கூடியதாக இல்லை. திட்டம் போடுகிறோம் அதனால் கம்யூனிஸ பாதையில் செல்லுகிறோம் என்று சொன்னால் இவைகளையெல்லாம் கவனிக்காமல், அது வெறும் வாதத்திற்குச் சொல்வது என்றே தான் எடுத்துக்கொள்ள வேண்டும். இதை கனம் சட்டசபை அங்கத்தினர்கள் உணர வேண்டும். வெளியிலுள்ள மக்கள் இதை உணர வேண்டும், என்பதை மட்டும் நான் தெரிவித்துக்கொள் கிறேன்.

ஆகவே திட்டம் போடுகிறோம் என்பதனால் சர்வாதிகார அடிப் படையில் செல்லுகிறோம் என்றும் கம்யூனிஸ அடிப்படையில் செல்லுகிறோம் என்றும் சொல்வது சரியல்ல. இன்றைக்கு எடுத் துக்கொண்டிருக்கக்கூடிய நடவடிக்கைகளைப் பார்த்தால் கம்யூ னிஸ அடிப்படையில் போய்க்கொண்டிருக்கிறது என்று சொல்லவே முடியாது. இன்றைக்கு இருக்கக்கூடிய அரசாங்கத் தின் கொள்கை என்ன? எந்த அளவுக்கு மக்களுக்கு அதிகாரத்தைக் கொடுத்திருக்கிறோம் என்பதையெல்லாம் பார்க்க வேண்டும். இன்றைக்கு அரசாங்கத்தின் கொள்கைப்படி சர்வாதி கார அடிப்படையில் கொள்கை இருக்கிறது என்று சொல்லப்படு கிறது. இதை கொஞ்சம் முக்கியமாக கவனிக்கவேண்டும்.

இன்றைக்கு மக்களுடைய மத்தியில் எப்படிப்பட்ட எண் ணம் பரப்பப்படுகிறது என்றால் சிறுபான்மையராக இருக்கக் கூடியவர்களுடைய கருத்துக்குத்தான் மதிப்புக் கொடுக்க வேண்டும் என்று சொல்லக்கூடிய அளவில் சொல்லப்பட்டு வரு கிறது. பெரும்பான்மையோர்கள் என்ன நினைத்தாலும் அது சரி யல்ல என்றும் பெரும்பான்மையோர் என்ன திட்டத்தைக் கொண்டு வந்தாலும் அது சரியல்ல என்றும் சொல்லப்படுகிறது. பெரும்பான்மையோருடைய எண்ணங்களுக்கு தவறான கருத்துக் களைக் கொடுக்கக் கூடிய அளவில் பேசப்பட்டு வருகிறது. சிறு பான்மையோர் என்ன நினைத்தாலும் அதுதான் சரி என்று சொல்லக்கூடிய அளவில் பேசப்பட்டு வருகிறது. ஆகவே இப் பொழுது சட்ட சபையில் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் 150 பேர்கள் இருக்கிறார்கள். அவர்கள் மெஜாரிட்டியாக இருப்ப தால் அவர்களுடைய கருத்துக்களை கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை, இரண்டு அல்லது நான்கு அல்லது பத்து அல்லது பதினைந்து பேர்கள் கொண்டிருக்கக்கூடிய கட்சிகளுடைய கருத்துக்களைத் தான் கேட்க வேண்டும் என்ற அடிப்படையில் பேசப்பட்டு வரு கிறது. சிறு எண்ணிக்கையுள்ள கட்சி சொல்லக்கூடிய கருத்துக் குத்தான் அதிகமாக மதிப்பு கொடுக்க வேண்டும் என்று சொல்லப் படுகிறது. இப்படிப்பட்ட ஒரு வாதத்தை இப்பொழுது ஆரம்பித் திருக்கிறார்கள். இந்த வாதத்தை ஏற்றுக்கொண்டால் அதுதான் சர்வாதிகாரத்திற்குக் கொண்டு போய்விடும். இப்பொழுது பத்து அல்லது பதினைந்து, எண்ணிக்கை கொண்டவர்களுடைய கருத்துக் களைக் கேட்டால் பிறகு நாலைந்து பேர்களைக்கொண்ட கட்சியி னுடைய கருத்துக்களைக் கேட்க வேண்டியதாக இருக்கும், அதற்கு பிறகு ஒருவருடைய கருத்தைக் கேட்க வேண்டியதாகக்கூட வந்து விடும். அந்த நிலைமையில் சர்வாதிகாரத்திற்குத்தான் கொண்டு போய் விடும் என்பதைமட்டும் தெரிவித்துக் கொள்ள விரும்பு கிறேன்.

9th November 1961] [Sri C. Subramaniam]

இன்றைக்கு பல்வேறு கட்சிகள் பல்வேறு கருத்துக்களைச் சொல்லும்போது அவைகளையெல்லாம் ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வரவேண்டியதாக இருக்கிறது. எதிர்க் கட்சியிலுள்ளவர்கள் என்ன சொல்லுகிறார்கள் என்று ஆலோசனை செய்து பார்க்க வேண்டியதாக இருக்கிறது. அவர்கள் சொல்வதை புறக்கணிப்பதாக இல்லை. அவர்களுடைய கருத்துக்கும் மதிப்புக் கொடுக்கப்படுகிறது. அவரவர்களுடைய கருத்துக்களைச் சொல்லுவதற்குதான் எல்லோருக்கும் சுதந்திரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில் ஜனநாயகம் அமைக்கப்பட்டிருக்கிறது. அது எந்தக் கட்சியாக இருந்தாலும் சரி அதன் கருத்துக்களை நன்றாக பரிசீலனை செய்துதான் பார்க்கப்படுகிறது. அப்படி பார்த்து ஒரு முடிவுக்கு வந்து அது தப்பாக இருந்தாலும் அதை மாற்றிக்கொள்வதற்கும் நமக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் கம்யூனிஸ அமைப்பில் பாதையில் போகக்கூடிய நாட்டில் இப்படிப்பட்ட அதிகாரம் கொடுக்கப்படவில்லை. ஒரு முடிவு எடுத்துக்கொண்டு விட்டால் அதுதான் கடைசி வரையிலும் கம்யூனிஸ பாதையில் போகக்கூடிய நாடுகள் இயங்கி வருகின்றன. அது முடிவு எடுத்த பிறகு அதை மாற்றிக்கொள்வதற்கு கஷ்டமாக இருக்கும் அங்கு. அதை மாற்ற வேண்டுமென்றால் குழப்பம் ஏற்படக்கூடியதாகி விடும். அவர்களுடைய சித்தாந்தம் அது. அவர்களுடைய சித்தாந்தம் அந்த அடிப்படையில் இருக்கிறது. அது எந்த முடிவாக இருந்தாலும் சரி எந்த பெரியவரால் முடிவு செய்யப்பட்டாலும் சரி அதை எதிர்த்துச் சொல்லக்கூடிய ஒரு சுதந்தரம் அங்கு கிடையாது. ஆனால் இங்கு அதைப்பற்றி எங்கு வேண்டுமானாலும் பிரசாரம் செய்யலாம், எந்த பத்திரிகையில் வேண்டுமானாலும் எழுதலாம். இந்த அளவுக்கு இங்கு சுதந்தரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மக்களுடைய கருத்துக்களை மாற்றுவதற்கு எந்த வகையில் வேண்டுமானாலும் முயற்சி எடுத்துக் கொள்ளலாம். ஒருவர் சொல்லக்கூடியதுதான் நல்லது, அது எந்த அறிஞர் சொன்னாலும் அதுதான் சரி என்று சொல்வது சரியல்ல. ஒரு முடிவு எடுத்துக்கொண்ட பிறகு அது தப்பாக இருந்தால் அதை மாற்றிக்கொள்வதற்கு வழி சொல்வதுதான் ஜனநாயகத்திற்கு உகந்தது, மெஜாரிட்டியாக உள்ளவர்களுடைய கருத்துக்களை ஏற்றுக்கொள்வதுதான் ஜனநாயகத்திற்கு உகந்தது என்பதை நான் மறுபடியும் வலியுறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இதெல்லாம் ஒரு புறமிருக்க, திட்டம் நமக்குத் தேவையா, திட்ட அடிப்படையிலே நாம் முன்னேறலாமா, வேறு விதமாக முன்னேறலாமா என்பதைப்பற்றி அடிப்படையாக நாம் இன்றைக்கு யோசித்துப் பார்க்கவேண்டியதாக இருக்கிறது. சிலர் நினைக்கலாம், திட்டம் என்று சொல்லும்போது கம்யூனிஸ்டு ரஷ்யாவில்தான் திட்டம் இருக்கிறது, அல்லது அந்தப் பாதையிலே செல்லக்கூடிய வேறு சில நாடுகளில்தான் திட்டம் இருக்கிறது என்று. திட்டம் அங்கேதான் ஆரம்பித்தது. என்றாலும், இன்றைக்கு எந்த முறையில் காலப் போக்கு இருக்கிறது என்பதைப் பார்க்கும்போது ஜனநாயக அடிப்படையில் இயங்குகிற நாடுகளிலே திட்ட

[Sri C. Subramaniam] [9th November 1961]

மிட்டுத்தான் முன்னேறவேண்டுமென்ற கருத்து பரவிக்கொண்டு வருகிறது. பின்னடைந்திருக்கும் நாடுகளில் அல்ல. பொருளாதாரத் துறையில் முன்னேற்றம் அடைந்திருக்கும் பல நாடுகளில் கூட இன்றைக்குத் திட்ட அடிப்படையில்தான் வேகமாக, கணிசமாக முன்னேற்றம் அடைய முடியும் என்ற கருத்து ஒப்புக்கொள்ளப்படுவது மட்டுமல்ல, அந்த முறையிலே நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டும் வருகின்றன.

இரண்டாவது மகா யுத்தத்திற்குப் பிற்பாடு ஐரோப்பிய நாடுகளிலே ஓரளவு குழப்பமான நிலைமை இருந்தாலுங்கூட, பொருளாதாரத் துறையில் கணிசமான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது—பிரான்சு நாட்டிலே. அதற்குக் காரணம் என்ன என்பதைப் பற்றிச் சமீபத்திலே பல இடங்களில் வாதங்கள் நடந்தன. அவர்கள் ஒரு முடிவுக்குத்தான் வந்திருக்கிறார்கள். பிரான்சிலே அரசியல் குழப்பமான நிலைமையில் பல மாறுதல்கள் அடிக்கடி ஏற்பட்டிருந்தாலுங்கூட, கணிசமான பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டிருப்பதற்குக் காரணம் அவர்கள் திட்ட அடிப்படையில் முன்னேற முன்வந்திருப்பதுதான் என்று இன்றைக்குப் பொருளாதார நிபுணர்கள், அரசியல் மேதைகள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அதன் காரணமாகத்தான் இங்கிலாந்திலேகூட பொருளாதாரத் துறையில் குழப்பமான நிலைமை ஏற்படும்போது, கன்சர்வேடிவ் கட்சி அரசாங்கத்திலே இருந்தாலுங்கூட, அவர்களும் திட்ட அடிப்படையில் காரியங்கள் செய்ய முன்வந்தால்தான் இந்தச் சிக்கல்களையெல்லாம் ஓரளவு நீக்க முடியும் என்று இன்றைக்கிருக்கும் கன்சர்வேடிவ் கட்சி நிதி மந்திரி வலியுறுத்தி வருகிறார் பார்லிமெண்டிலேகூட சமீபத்தில் அதுபற்றிப் பேசியிருக்கிறார். இதைப்பற்றி பத்திரிகையிலும் மேடைகளிலும் விவாதங்கள் நடந்துகொண்டிருப்பதை விஷயமறிந்தவர்கள் கட்டாயம் தெரிந்திருப்பார்கள்.

முன்னேற்றம் அடைந்திருக்கும் நாடுகளில், அதைவிட அதிகமான முன்னேற்றம், வேகமான முன்னேற்றம் ஏற்படவேண்டுமென்று சொல்லும்போது திட்ட அடிப்படையில்தான் இதைச் சமாளிக்க வேண்டுமென்ற கருத்தை அவர்கள் ஒப்புக்கொள்வது மட்டுமல்ல, நடைமுறைக்குக் கொண்டுவருவதற்கும் முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். நாம் இன்னும் சிக்கலான நிலைமையில் இருக்கிறோம். பொருளாதாரத் துறையிலே தேங்கித் தேய்ந்து போயிருக்கும் நிலைமையில் இருக்கிறோம். தேங்கித் தேய்ந்து போனதற்குக் காரணம் 150, 200 ஆண்டுகளாக நாம் அரசியல் அடிமைகளாக அன்னிய ஆட்சியின் கீழ் இருந்ததுதான். அந்தக் காரணத்தால்தான் மற்ற நாடுகள் முன்னேற்றம் அடைந்திருக்கும்போது நாம் தேங்கித் தேய்ந்து போயிருந்த நிலைமை ஏற்பட்டது. தேங்கித் தேய்ந்து போன நிலையை இன்றைக்கு மாற்றி, அதிலே வளர்ச்சி ஏற்படச் செய்யவேண்டும் என்பதிலே அக்கறை கொண்டிருக்கும் நாம், இவ்வளவு பெரிய நாடாக இருந்தும் இவ்வளவு பிற்போக்கு நாடாக இருக்கும் நிலையில் இதை எந்த முறையில் செய்வது என்பதுதான் இன்றைக்கு நாம் முடிவு கட்டவேண்டிய விஷயம்.

9th November 1961] [Sri C. Subramaniam]

அவ்வாறு யோசனை செய்யும்போது, மற்ற நாடுகளின் அனுபவத்தை எடுத்துக்கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம். ஒருசில கருத்து வேறுபாடு ஆங்காங்கு இருந்தாலுங்கூட, திட்ட அடிப்படையில் நமக்கு இருக்கும் வசதிகளை எந்த அளவுக்கு நல்ல முறையில் பயன்படுத்த முடியுமோ அதைப் பயன்படுத்தி பொருளாதாரத் துறையில் எந்த அளவுக்கு அபிவிருத்தி செய்ய முடியுமோ அந்த அடிப்படையில் நாம் நடவடிக்கை எடுத்தால்தான் நாட்டில் முன்னேற்றத்தை நாம் எற்படுத்த முடியும், கணிசமான வளர்ச்சியை எற்படுத்த முடியும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறோம்.

இந்த முடிவைப் பற்றி சமீப காலம் வரையில் கருத்து வேற்றுமை இருந்ததில்லை. சமீபத்தில்தான் கருத்து வேற்றுமை ஏற்பட்டிருக்கிறது. ஜனநாயகத்திலே எல்லாக் கருத்துக்களுக்கும் இடம் உண்டு. எந்த வேறுபட்ட கருத்தையும் நாம் வரவேற்கிறோம். அதிலே எந்த அளவு உண்மை இருக்கிறது என்பதைப் பற்றியும் நாம் பார்க்கக் கடமைப்பட்டிருக்கிறோம். ஆனால், இன்றைக்கு இருக்கும் மனித அனுபவத்தை வைத்துக்கொண்டு மற்ற சமுதாயத்திலே இருக்கும் முன்னேற்றத்தையும் அடிப்படையாக வைத்துக்கொண்டு, இன்றைக்கு நம்முடைய நாடு வேகமாக முன்னேறவேண்டும், பொருளாதாரத் துறையிலே கணிசமான வளர்ச்சி அடையவேண்டுமென்றால் திட்ட அடிப்படையில்தான் முடியும் என்பதை நான் முதலில் வலியுறுத்த விரும்புகிறேன். திட்டம் போடுவதில் தவறுகள் நேரலாம், நிறைவேற்றுவதிலும் தவறுகள் நேரிடலாம். அது வேறு விஷயம். அடிப்படையாக இன்றைக்கு ஒன்று ஒப்புக்கொள்ளவேண்டியது அவசியமாக இருக்கிறது. திட்ட அடிப்படையில்தான் நம்முடைய நாட்டில் பொருளாதார வளர்ச்சியை வேகமாகக் கொண்டுசெல்ல முடியும். கணிசமாக பொருளாதார வளர்ச்சியைப் பெற முடியும் என்பதை உலகத்திலே இருக்கும் எல்லா நிபுணர்களும் சொல்கிறார்கள். ரஷ்ய நிபுணர்கள் வேண்டுமென்றால் அவர்கள் முறைப் பிரகாரம் சொல்வார்கள் என்று சொல்லிவிடலாம். ஆனால், முதலாளித்துவ நாடாக, கட்டுப்பாடுகள் ஒன்றுமே வேண்டியதில்லை, திட்டம் அவசியமில்லை என்று சொல்லக்கூடிய அமெரிக்க நாட்டிலிருந்து வரக்கூடிய பொருளாதார நிபுணர்கள், இங்கிலாந்திலிருந்து வரக்கூடிய பொருளாதார நிபுணர்கள், உலகத்திலே வெவ்வேறு பகுதிகளிலிருந்து வரக்கூடிய பொருளாதார நிபுணர்கள் எல்லோரும் ஏகோபித்த கருத்துத்தான் கொண்டிருக்கிறார்கள். திட்ட அடிப்படையில்தான் இந்தியாவின் பிற்காலம் அமைந்திருக்கிறது என்பதைப்பற்றி நான் பார்த்த வரையில் கருத்து வேறுபாடு நிபுணர்கள் மத்தியில் இருப்பதாகத் தெரியவில்லை

அந்தத் திட்டத்தை எப்படிப் போடுவது என்பதைப்பற்றிச் சில கருத்து வேறுபாடுகள் இருக்கலாம். பல கருத்துக்கள் இருக்கின்றன என்ற காரணத்தால் ஒரு முடிவும் எடுக்காமலிருந்தால் காரியம் நடைபெறாது. ஆகவே, திட்டத்தைப் போடுவதிலே

[Sri C. Subramaniam] [9th November 1961

பல்வேறு முறைகள் இருந்தாலும் நாம் ஒரு முடிவு எடுக்க வேண்டியதாக இருக்கிறது. எந்த முறையிலே நாம் திட்டம் போடுவது என்று முடிவு செய்து திட்டத்தை உருவாக்கி திட்டத்தை நிறைவேற்றுவதற்கு முன்வர வேண்டியவர்களாக இருக்கிறோம். அப்பேர்ப்பட்ட முறையிலேதான் நிர்வாகத்திலே திறமை வாய்ந்தவர்கள், அனுபவம் உள்ளவர்கள் பொருளாதார விதிகளை நன்றாக உணர்ந்தவர்கள், பொருளாதார நிபுணர்கள், வெவ்வேறு துறைகளிலே பணியாற்றுகிறவர்கள். இவர்களுடைய அனுபவத்தை அடிப்பயையாகக் கொண்டு, இதிலே ஆலோசனை கூறுவதற்குக் குழுவை நியமிப்பது நல்லது என்ற முறையில் திட்டக் கமிஷன் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த திட்டக் கமிஷன் சொல்லக்கூடிய ஆலோசனைகளை அடிப்படையாகக் கொண்டு நாம் திட்டத்தை உருவாக்கவேண்டுமென்று சொல்கிறோம். நாம் போட்டிருக்கும் திட்டத்தில் ஒரு சிறு குறை கூட இல்லை, 100-க்கு 100 முழுவதும் பூர்ணத்துவம் பெற்றிருக்கிறது. 'பர்பெக்ட்' ஆன திட்டம் என்று தான் சொல்லத் தயாராயில்லை. எந்த மனித முயற்சிதான் குற்றமற்றதாக இருக்கிறது என்று நான் கேட்க விரும்புகிறேன். (சில கனம் அங்கத்தினர்கள் சிரிப்பு). இன்றைக்குச் சிரிக்கின்றவர்கள் கூட அவர்கள் பேசுகிற பேச்சிலே செய்கின்ற நடவடிக்கைகளிலே குற்றம் இல்லை என்று நினைத்துக் கொண்டிருக்கலாம். தாம் அறிஞர்கள், தாம் பேசுவதில் குற்றம் இல்லை, செய்வதில் குற்றம் இல்லை என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருக்கலாம். ஆனால், அதைக் கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தால், சல்லடை போட்டு அரித்தால்கூட நல்லது இருக்கமுடியாது என்பதில் சந்தேகம் இல்லை. இதிலே சிரிக்கக்கூடியது ஒன்றுமில்லை. இது இயற்கை விதி. சிலர் நினைக்கலாம்—பட்டங்கள் வைத்துக் கொண்டு தாம் சொல்வதுதான் சரி, அதுவே இறுதியானது என்று. நாங்கள் அம்மாதிரி நினைப்பதில்லை. நாங்கள் சாதாரண மனிதர்கள். நாங்கள் செய்யக்கூடிய முடிவிலே குறை இருக்கலாம். திட்டங்களை நடத்துவதிலே கூட குறை இருக்கலாம். குறைகளை யாராவது எடுத்துச் சொன்னால், குறைகளை மனதிலே படும்படியாகச் சொன்னால், குறையாக இருந்தால் ஒப்புக்கொள்ளவேண்டுமென்ற மனோபாவம் எங்களுக்கு இருக்கிறது. ஏதோ நாம் செய்துவிட்டோம், நெற்றிக்கண்ணைக் காட்டினாலும் திருத்திக் கொள்ள மாட்டோம் என்ற மனோபாவம் எங்களுக்கு இல்லை. குற்றம் இருந்தால் திருத்திக்கொள்ளவேண்டுமென்ற மனோபாவத்தில்தான் நாங்கள் இயங்கிவருகிறோம். இனிமேல் வருகிறவர்கள் தாங்கள் குற்றமே செய்யாமல், தவறே இல்லாமல் காரியங்களைச் செய்யத் தகுதி பெற்றிருக்கிறோம் என்பார்களானால் உண்மையில் அந்த மனப்பான்மைத்தான் அவர்கள் நிர்வாகத்திற்கு வரவே தகுதியற்றவர்கள் என்பதற்கு அடிப்படையாக இருக்கக்கூடியது என்பதை நான் வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். திட்டம் முழுவதிலுமே எந்தவிதமான குறையும் இல்லை என்று நான் சொல்ல முன்வரவில்லை. ஆனால், எங்களால் இயன்ற அளவு, மற்றவர்கள் அறிவை, அனுபவத்தைப் பயன்படுத்திக்கொண்டு நாங்கள் திட்டத்தை உருவாக்கியிருக்கிறோம். அதிலே ஆங்காங்கு குறை

9th November 1961] [Sri C. Subramaniam]

இருந்தால், அந்தக் குறை சரியானதாக இருந்தால், அதைத் திருத்துவதற்கு நாங்கள் எப்பொழுதும் தயாராயிருக்கிறோம் என்பதையும் நான் பணிவோடு சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

அதுமட்டுமல்ல. திட்டத்தை உருவாக்குவது ரொம்ப சுலபம். திட்டம் போடுவதே ஒரு கலையாகிவிட்டது. மற்ற நாடுகளின் அனுபவத்தை வைத்துக்கொண்டு திட்டம் உருவாக்குவது சுலபம். ஆனால், திட்டத்தை நிறைவேற்றுவதில் எவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை நாம் நன்றாக உணரவேண்டும். அதிலே பல தவறுகள் நமக்கு ஏற்பட்டுவிடுகின்றன என்பதை நான் உணருகிறேன். நாம் எடுக்கக்கூடிய நடவடிக்கையிலே பல தவறுகள் நம்மையும் மீறி ஏற்பட்டுவிடுகின்றன என்பதை எதிர்க் கட்சியிலே இருந்தால்தான் எடுத்துச்சொல்ல முடியும் என்பது அல்ல. நானே எடுத்துச் சொல்ல முடியும். எங்கேங்கே தவறு ஏற்பட்டு விட்டது என்பதை நான் எடுத்துச் சொல்ல முடியும். ஆனால், அந்தத்தவறு ஏற்படாமலிருந்தால்தான் திட்டம் ஏற்படவேண்டும், அப்படியானால்தான் நிர்வாகத்திலே இருக்கவேண்டும் என்றால், நாம் எந்தக் காரியத்தையுமே ஆரம்பிக்க முடியாது. கல்லாக ஒன்று இருந்தால் அதற்கு உயிர் இல்லை, அசைவு இல்லை, ஆகவே அதன் இயக்கத்தில் தவறு ஒன்றும் நேரவில்லை என்று சொல்லி விடலாம். ஆனால் உயிர் உள்ள ஒன்றின் செய்கையிலே நல்லதும் உண்டு. கெட்டதும் உண்டு. தவறு ஏற்படுவது என்பது மனித இயற்கை. அதுவும் மனிதன் ஒரு பெரிய காரியத்தை எடுத்து நிறைவேற்றுகிறபோது பெரும் தவறுகள் ஏற்படத்தான் செய்யும். தொன்று தொட்டு ஏற்பட்டு வருகின்ற மனித அனுபவமே இதைத் தான் சொல்கிறது. தவறுகள் ஏற்பட்டாலும் கூடத் தவறைத் தவறு என்று ஒப்புக்கொண்டு அவ்வப்போது அதைச் சரிசெய்து கொண்டு போவதுதான் மனித அறிவுக்கு ஒத்தது, மனிதப் பண்பாட்டுக்கு ஒத்தது என்று முதலில் சொல்ல விரும்புகிறேன். 3-30 p.m.

திட்டம் முழுவதும் நூற்றுக்கு நூறு சரியென்று நாங்கள் சொல்லவில்லை. நூற்றுக்கு நூறு பிழை இல்லாமல் சரியாக அவற்றை நிறைவேற்றிவிட்டோம் என்றும் நாங்கள் சொல்லவில்லை. இப்போது இருக்கக்கூடிய சூழ்நிலையில்—எங்களுக்கு இருக்கக் கூடிய அநுபவங்களை எல்லாம் வைத்துக்கொண்டு—எங்களால் முடிந்தவரையில் திறமையாக நல்லதொரு திட்டத்தை வகுத்திருக்கிறோம் என்றுதான் சொல்லவிரும்புகிறேன். எங்கள் சக்திக்கு ஏற்றபடி நிறைவேற்றவும் முன்வந்திருக்கிறோம்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை வைத்துக்கொண்டு பார்த்தாலும் சரி, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை வைத்துக் கொண்டு பார்த்தாலும் சரி, இதுவரையிலும் கிடைத்திருக்கக் கூடிய புள்ளிவிவரங்களை வைத்துக்கொண்டு பார்த்தாலும் சரி—சில குறைகள் ஏற்பட்டிருக்கலாம், சில தவறுகள் ஏற்பட்டிருக்கலாம்—இன்றைக்குக் கணிசமான அளவுக்கு நாம் முன்னேறியிருக்கிறோம் என்பதை யாரும் மறுக்கவே முடியாது. எந்தத் துறையை எடுத்துக்கொண்டாலும் சரி—அதுவும் இந்தப் பத்து ஆண்டுகளில்

[Sri C. Subramaniam] [9th November 1961

—கொஞ்சங்கூட விருப்பு வெறுப்பு இல்லாமல் நாடுநகரங்களுக் குள்ளே சென்று பார்த்தால் மக்களுடைய வளவாழ்வில் கணிச மான முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பது கண்கூடு. இதை யாரும் மறுக்க முடியாது. அதே அடிப்படையில் இந்த மூன்ரு வது திட்டத்தையும் வகுத்து நாட்டில் நல்லதொரு முன்னேற்றம் எல்லாத்துறைகளிலும் ஏற்படும்படியாகச் செய்யலாம் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது. திட்ட அடிப்படையில்தான் முன்னேற முடியும் என்ற கருத்தில் இதைத் தயாரித்திருக்கிறோம். அநேகமாக திட்டம் வேண்டும் என்பதை—ஒரு கட்சி தவிர பாக்கி எல்லாக் கட்சிகளும் ஒத்துக்கொள்கின்றன. திட்டமே வேண்டாம் என்கிற அடிப்படையில் எதிர்க்கட்சித் தலைவர் பேசு வார்கள், அதற்குப் பிறகு அந்தக் கருத்துக்களுக்கு நான் பதில் சொல்கிறேன். ஆனால் இன்றைக்கு மாற்றுக் கட்சிகளை எடுத்துக் கொண்டால் திட்டத்தை வேகமாக நிறைவேற்றவேண்டும் என்கிற வர்கள் இருக்கிறார்கள். திட்டம் போதாது, இன்னும் அதிகமாகப் போடவேண்டும் என்று சொல்கிறவர்கள் இருக்கிறார்கள். இன்னும் திறமையாக நிறைவேற்றவேண்டும் என்று சொல்லக்கூடிய கட்சி களும் இருக்கின்றன. ஆகவே ஒருவகையில் எல்லாக் கட்சிகளும் —நான் முன்பு சொன்னதுபோல ஒரு கட்சியைத் தவிர—மற்றக் கட்சிகள் எல்லாம் திட்ட அடிப்படையில்தான் முன்னேறமுடியும் என்கிற கொள்கையை ஒப்புக்கொள்கின்றன. "ஆனால் நான் சொல்வதைத்தான் கேட்கவேண்டும்" என்று ஒருவர் தனியாகச் சொன்னால்—இந்த ஜனநாயக காலத்தில் அதை ஏற்றுக்கொள்ள என்னால் முடியாது. என்னதான் ஒருவர் சொல்வது நல்லதாக இருந்தாலும்கூட ஜனநாயக அடிப்படையில் பலரும் ஒப்புக் கொள்ளக்கூடிய கருத்தையே நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். ஆகையால்தான் இன்றைக்கு எல்லாத் துறை களிலும் உள்ளவர்களைக்கொண்டு இந்தத்திட்டங்கள் பலமுறை பல கட்டங்களில் ஆராய்ச்சி செய்யப்பட்டு வகுக்கப்பட்டிருக் கின்றன. இந்தத் திட்டத்தைத்தான் நாங்கள் மக்கள் முன்னிலை யில் வைத்திருக்கிறோம். இந்தத் திட்டத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டால் அதை நிறைவேற்றி வைப்பதற்கு அவர்கள் எங்களுக்கு ஆதரவு அளிக்கவேண்டும். எங்கள் கொள்கையை சில கட்சிகளைப் போல ஒளித்து வைத்துவிட்டு தேர்தலுக்கு நிற்க விரும்பவில்லை. "தேர்தல் முடியட்டும், அதுவரைக்கும் இந்த நம்முடைய கொள்கையை வெளிப்படுத்த வேண்டாம், தேர்தலில் வெற்றி பெற்றுவிட்டால் இருக்கவே இருக்கிறது, நம் கொள் கையைச் செயலாக்குவோம்", என்ற கருத்துடையவர்கள் அல்ல நாங்கள். ஒளிவுமறைவு இன்றி எங்கள் கருத்துக்களை மக்களுக்கு முன் வைத்திருக்கிறோம். பிப்ரவரி மாதம் தேர்தல் வருகிறது. இந்தத் திட்ட அடிப்படையில்தான் மக்களிடத்தில் வோட்டு கேட்கப் போகிறோம். அவர்கள் என்ன தீர்ப்பு கொடுத்தாலும் அதை ஏற்றுக்கொள்ளப்போகிறோம். மக்கள் தீர்ப்பு எதுவாக இருந்தாலும் அதை ஏற்றுக்கொள்வோம். மற்றவர்களும் அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்பது என் வேண்டுகோள். அப்போதுதான் உண்மையான ஜனநாயகம் தழைக்கும். அதை

9th November 1961] [Sri C. Subramaniam]

விட்டு அவர்கள் தங்கள் தீர்ப்பை அளித்த பிறகும் அதை ஏற்றுக் கொள்ளாமல் "அவர்களுக்கு என்ன தெரியும். அவர்கள் ஒன்றும் அறியாதவர்கள். ஆகவே அதை ஒத்துக்கொள்ள முடியாது" என்று சொல்வது நமக்கு உகந்தது அல்ல. இந்த ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் மூன்றுவது திட்டத்தை இந்தச் சபையே வகுக்கக்கூடிய பொறுப்பை உடையது. அதைப்போலவே நாடு முழுவதற்குமான திட்டத்தை வகுக்கக்கூடிய பொறுப்பு பார்லிமெண்டினுடையது. அபிவிருத்திக்குழு, மற்றவர்கள் எல்லாம் எந்த எந்த வகையில் திட்டம் அமையவேண்டுமென்ற ஆலோசனையை அளிக்கிறார்கள். இப்போது உள்ள திட்டங்கள் என்ன, இன்னும் பல்வேறு துறையில் என்ன என்ன அபிவிருத்தித் திட்டங்களை அமைக்கலாம் என்பதைப்பற்றி பரிசீலனை செய்ய வேண்டியவர்கள் நாம்.

அதிலே கூடக் கருத்து வேறுபாடு இருந்தது. அந்த அபிவிருத்திக் குழுவிலேயே சிலபேர் 8,000 கோடி இருந்தால் போதும் என்றும், சிலபேர் 9,000 கோடி இருக்கவேண்டுமென்றும், சிலபேர் 10,200 கோடிக்கு மேல் போகவே கூடாது என்றும் சொன்னார்கள். பல அளவுகளைக் கணக்கிட்டு கடைசியாக 11,000 கோடி அளவில் திட்டம் இருக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது. அதிலும் பொதுத் துறை, தனியார் துறை இரண்டும் சேர்ந்து அந்த அளவு இருக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது. என்னென்ன திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமென்பது மட்டுமல்ல, நாட்டிலே உள்ள பல்வேறு பகுதிகளும் பல்வேறு அளவில் அபிவிருத்தி அடையும் வகையில் திட்டமிடப்பட்டிருக்கிறது. பிற்போக்காக இருக்கக்கூடிய பகுதிகள் இன்னும் கொஞ்சம் அதிகமாக வளர்ச்சி பெறக்கூடிய முறையிலே திட்டம் அமைக்கப்படவேண்டுமென்ற சித்தாந்தத்திலே ஒப்புக் கொள்ளப்பட்டு அந்த அடிப்படையிலே முடிவுகள் ஓரளவு எடுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, நாடு முழுவதற்கும் இந்தத் திட்டம் என்ற அடிப்படையில்தான் இதை நோக்க வேண்டும். நாட்டைப் பிரிக்க வேண்டுமென்று சொல்கிறவர்கள் கூட இன்றைக்குத் திட்டத்தைப் பரிசீலனை செய்யும்போது திட்டம் நாடு முழுவதற்கும் என்ற அடிப்படையில் வைத்துத்தான் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். அந்த அடிப்படையில் பார்த்து திட்ட அளவு இதற்கு மேல் போகலாமா அல்லது இதை விடக் குறைக்கலாமா என்றெல்லாம் யோசனை செய்து, இந்த அளவுக்கு மேல் போனால் கொஞ்சம் கஷ்டம் ஏற்படலாம் என்ற காரணத்தால் 11,000 கோடி அளவில் திட்டம் இருக்கலாம் என்று முடிவு செய்யப்பட்டது. இதே அளவுக்குத்தான் செய்ய வேண்டுமென்று யாரும் சொல்ல முடியாது. எதிர்பாராமல் நாம் போட்டிருக்கக்கூடிய திட்டத்திற்குக் கீழே போனாலும் போகலாம். அதிர்ஷ்டவசமாக நாம் எடுக்கக் கூடிய திட்டங்கள் நல்ல முறையில் நிறைவேறி வசதிகள் பெருகினால் இப்போது போட்டிருக்கும் அளவை மீறியும் செய்யலாம். இந்தத் தொகையை ஒரு பொது நோக்காக வைத்துக்கொண்டு திட்டத்தை நிறைவேற்ற நாம் முன் வந்திருக்கிறோம்.

[Sri C. Subramaniam] [9th November 1961

இந்தத் திட்டத்தை நாம் இரண்டு பகுதிகளாக பிரிக்க வேண்டியதாக இருக்கிறது. ஒன்று, மத்திய அரசாங்கத் திட்டங்கள், இரண்டாவது ராஜ்ய அரசாங்கத் திட்டங்கள். மத்திய அரசாங்கத் திட்டங்கள் ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு மட்டும் சேர்ந்தது அல்ல. அந்தத் திட்டங்கள் இந்தியா முழுவதற்கும் உரிய திட்டங்கள். இன்றைக்கு இரும்புத் தொழிற்சாலே, உருக்குத் தொழிற்சாலே ஆரம்பிக்க வேண்டுமென்று சொன்னல் அந்த மூலப் பொருள்கள் எந்தப் பகுதிகளில் கிடைக்கின்றனவோ, எந்தப் பகுதியில் ஆரம்பித்தால் சிக்கனமாக உற்பத்தி செய்ய முடியுமோ அங்கே அந்தத் தொழிலே ஆரம்பிக்க முடியும். அந்த முறையில் மத்திய அரசாங்கத் திட்டங்கள் இன்றையதினம் வகுக்கப்பட்டிருக்கின்றன. அதை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பு மத்திய அரசாங்கத்திற்கும் மத்திய அரசாங்கத்தை நடத்திச் செல்லக்கூடிய, நம்முடைய பிரதிநிதிகள் இருக்கக்கூடிய பார்லிமெண்டுக்கும் ஆகும்.

எந்தெந்தத் திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டுமென்பது பற்றியும் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு ராஜ்ய அரசாங்கமும் எந்த அளவுக்குத் திட்டங்களே நிறைவேற்ற வேண்டுமென்று முடிவு செய்யும்போது, நம் ஒரு ராஜ்யம் மட்டுமல்ல, 14 ராஜ்யங்கள் இருக்கின்றன என்பதை நாம் மனதில் எண்ணிப் பார்க்க வேண்டும். 14 ராஜ்யங்களும் என்னென்ன தேவை என்று சொல்வதை வைத்துக்கொண்டு முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. கேரளமும், மைசூரும், ஆந்திரமும் இன்னும் வடக்கே போகப் போக மற்ற ராஜ்யங்களும் இருக்கின்றன. எல்லோருடைய ஆசைகளேயும், அளவுகளேயும் கணக்கில் வைத்துக் கொண்டுதான் இருக்கக் கூடிய வசதியை எந்த அளவுக்குப் பங்கு போட வேண்டுமென்ற முறையில் பங்கு போடப்பட்டிருக்கிறது. நம்முடைய சட்டசபையில் விவாதிக்கும்போது 400 கோடி அளவில் இருக்கலாம் என்று முடிவு செய்தோம். இந்த மாதிரி ஒவ்வொருவரும் கொடுத்த கணக்கைக் கூட்டிப் பார்க்கும்போது நம்மிடம் இருக்கும் வசதிக்கு மேல் போய்விட்டது. ஒவ்வொரு ராஜ்ய அளவையும் கணக்கிட்டு, நம்மிடம் இருக்கிற வசதிக் கணக்குகள் வருகிற மாதிரி திட்டத்தை நிறைவேற்றுவது அவசியமாகிறது. அந்த அடிப்படையில் நம்முடைய ராஜ்யத்திற்கு 291 கோடி ரூபாய் அளவிற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது. நம்முடைய நாட்டுக்கு என் ஆயிரம் கோடி ரூபாய்க்குத் திட்டமிடக் கூடாது என்று கேட்டால் பக்கத்தில் இருக்கக்கூடிய மற்றவர்களேச் சுரண்டி நாம் முன்னுக்கு வருவது என்பது முடியாது என்றுதான் சொல்ல வேண்டும் அவர்கள் ஏமாளிகள் அல்ல. ஆகவே, நம்மை மட்டும் நினைத்துக் கொண்டு ஆயிரம் கோடி வேண்டுமென்று கேட்டால் ஏதோ "அடா வழக்கு" என்ற முறையிலே சொல்லலாம் அல்லது வீண் பழிக்காக வேண்டுமானல் சொல்லலாம். இன்றைக்கு நாம் ஒன்று பட்ட நாடாக இயங்கும்போது மற்ற ராஜ்யங்களின் ஆசைகளேயும், அவர்கள் வசதிகளேயும் நம்முடைய வசதிகளேயும் மனதில் கொண்டு நியாயமாகப் பங்கு போட்டுக் கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது. அந்த முறையிலே நான் உறுதியாக, எந்தவிதமான

9th November 1961] [Sri C. Subramaniam]

மனக் கூசலும் இல்லாமல் நம்முடைய பங்கு குறைவு அல்ல என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இருப்பதைப் பங்கு போட்டுக் கொண்டதில் எந்த விதமான அநியாயமும் ஏற்பட்டு விடவில்லை. இன்னும் புதிதாகப் பல வசதிகள் வேண்டுமானால், அதிகமாகப் பெற வேண்டுமென்ற கருத்தை ஒப்புக் கொள்ளும் போது, சரியான பங்கு, நியாயமான பங்கு, ஓரளவு அதிகமாகக் கூடப் பெற முயற்சி செய்து ஓரளவு அதில் வெற்றியும் பெற்றிருக்கிறோம் என்று உறுதியாகச் சொல்லிக் கொள்ள முடியும். ஆகவே, இன்றைக்கு நம்முடைய ராஜ்ய அரசாங்கம் மூலம் நிறைவேற்றப் படக் கூடிய திட்டங்களின் அளவு 291 கோடி. நம்முடைய ராஜ்ய வரம்புக்குள்ளாகவே மத்திய அரசாங்கத் திட்டங்கள் வேறு பல இருக்கின்றன. அந்தத் திட்டங்கள் இந்த 291 கோடி ரூபாயில் சேரவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். மொத்தத் திட்டத்தின் அளவு 11,000 கோடி என்று சொல்லும்போது அதில் அரசாங்கம் ஈடுபடக்கூடிய திட்டங்கள் மட்டுமல்லாது தனியார் துறையிலே நடக்கக் கூடிய திட்டங்களும் அடங்கியிருக்கின்றன. ஆகவே, ராஜ்ய சர்க்காரே நிறை வேற்றும் திட்டங்களுக்கு மட்டும் ஒதுக்கப்பட்டிருக்கக் கூடிய தொகையைக் கொண்டு, 11,000 கோடி ரூபாய்த் திட்டத்தில் நமக்குக் கிடைத்திருப்பது மிகவும் கொஞ்சமே என்று பேசுவதில் பிரயோஜனம் இல்லை. 291 கோடி தான் நமக்குக் கிடைத்திருக்கிறது என்று கிளிப்பிள்ளை மாதிரி சொல்வதில் பயன் இல்லை. இந்த நிதி மந்திரியால் 291 கோடிக்கு மேல் கேட்டுப் பெற முடியவில்லை என்று வாதம் செய்து கொண்டிருந்தால் அது அறியாத மக்களை ஏமாற்ற வேண்டுமானால் பயன் படுமே தவிர அறிந்தவர்களை ஏமாற்ற அறிஞர்களாலும் முடியாது என்பதை வலியுறுத்திச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே, 291 கோடி என்பது ராஜ்ய அரசாங்கம் மேற்கொண்டு நடத்தக் கூடிய திட்டங்கள் . மற்றும் மத்திய அரசாங்கம் எடுத்து நடத்தக் கூடிய திட்டங்கள் இருக்கின்றன, தனியார் துறையிலே எடுத்து நடத்தக் கூடிய திட்டங்கள் இருக்கின்றன. ஆகவே, 291 கோடி என்று சொல்லும்போது இதை நம் மனதிலே வைத்துக் கொள்ளவேண்டும். தனியார் துறைக் கணக்கைப் பொறுத்த வரையிலே ஒரு கருத்து வேறுபாடு இருக்கிறது. ஒருசிலர் நினைப்பது, எல்லா வேலைகளையும் அல்லது எல்லா அபிவிருத்திகளை யும் தனியார் துறையில் விட்டுவிடக்கூடாது என்று கேட்கிறார்கள். சர்க்கார் அபிவிருத்தித் திட்டங்களில் தலையிட வேண்டிய அவசியமே இல்லை என்று சுதந்திரக்கட்சி வற்புறுத்தி வந்திருக்கிறது. தேர்தல் அறிக்கையிலும் இதைத்தான் சொல்லியிருக்கிறது. தொழில் திட்டங்களில் சர்க்கார் தலையிடக்கூடாது, அது ஜனநாயகத்திற்கே விரோதமானது என்கின்ற அடிப்படையில் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். அந்தக் கூற்று தவறு என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இன்றைக்கு ரஷ்யாவை எடுத்துக்கொள்வோமே யானால் அங்கு எல்லாத் தொழில்களிலுமே பொதுத்துறையில் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஆகவே தனியார் துறையில் நடப்பதைப்பற்றி அங்கு பார்க்க முடியாது. அதைவிட்டுவிட்டால் ஜனநாயக அடிப்படையில் நடைபெற்றுக்கொண்டிருக்கக்கூடிய

எந்த நாட்டை எடுத்துக் கொண்டாலும் பொதுத்துறை கணிசமான அளவில் இருந்து கொண்டிருக்கிறது. அது போன்ற நாடுகளில் இருக்கின்ற முன்னேற்றத்தையும் பார்த்துத்தான், நம்முடைய கொள்கைக்கு ஏற்ப தனியார் துறையிலும், பொதுத் துறையிலும் இரண்டு துறையிலும் முன்னேற்றங்கள் ஏற்பட வேண்டும் என்ற அளவில் தான் நாம் அபிவிருத்தித் திட்டங்களை போடுகிறோம். நம்மைப்பொறுத்தவரையில் பொதுத்துறையிலும் தனியார்த் துறையிலும் முன்னேற்றம் ஏற்பட வேண்டும். இதில் இன்னொரு வாதம் என்னவென்றால், தனியார் துறைக்காக முக்கியத்துவம் அதிகம் கொடுப்பதா அல்லது பொதுத் துறைக்கு முக்கியத்துவம் கொடுப்பதா என்கின்ற வாதம் வருகிறது. ஒரு சிலர் பொதுத்துறையில் அதிகமாக ஒதுக்கிவிட்டார்கள் என்று குறைப்படுகிறார்கள். இன்னொரு பக்கத்தில் தனியார் துறைக்கு அதிகமாக ஒதுக்கி விட்டார்கள் என்று குறைபடுகிறார்கள். சில இடங்களில் குறை ஏற்படலாம். ஆனால் அதையே அடிப்படையாக வைத்துக்கொண்டு கொள்கையையே குறை கூறுவது என்பது சரியல்ல. பொதுத்துறையைப் பொறுத்தவரையில் நம்முடைய கொள்கையின் படி அடிப்படையாக இருக்கின்ற தொழில்கள், அதாவது கனரக தொழில், இரும்பு, உருக்கு உற்பத்தித் தொழில், எண்ணெய் உற்பத்தித் தொழில், நிலக்கரி, மின்சாரம் போன்ற தொழில்களை எல்லாம் பொதுத்துறையில் நடத்தி வருகிறோம். அதே சமயத்தில் இதன் மூலமாக உற்பத்தி செய்யப்படும் பொருட்களை உபயோகப்படுத்தக்கூடிய பல்வேறு தொழில்களை தனியார்துறையில் நிறைவேற்ற வேண்டும் என்று நிர்ணயித்திருக்கிறோம். அதோடு இதில் முக்கியமாக பொதுத்துறையில் நடைபெறும் தொழில்களில் ஏற்படும் வளர்ச்சிக்கு ஏற்ப தனியார் துறையிலும் தொழில்கள் பெருக வேண்டும். அடிப்படை பொருட்களை மட்டும் உற்பத்தி செய்து கொண்டிருந்தால் அதன் மூலமாக சமுதாயத்திற்கு எந்தவிதமான பயனும் ஏற்படாது, அதை உபயோகப்படுத்தும்போதுதான் சமுதாயத்திற்கு அது பயன் படுகிறது. உற்பத்தி செய்யும் எல்லாப் பொருட்களும் உபயோகித்தால்தான் நல்ல பலன் கிடைக்க முடியும். நிலக்கரியை எடுத்துக் கொண்டால் பல்வேறு துறையில் அதை உபயோகப்படுத்தியாக வேண்டும். மின்சாரத்தை எடுத்துக்கொண்டால் அதையும் பல் வேறு துறையில் உபயோகப்படுத்தியாகவேண்டும். அந்த அளவுக்கு இதைப்பார்க்கும்போது உற்பத்தி செய்கின்ற அடிப் படைப் பொருட்களை போதுமான அளவு உபயோகப்படுத்துகின்ற வேறு பல தொழில்களும் வளர்ந்தாக வேண்டும். இல்லாவிட்டால், வெட்டுகின்ற நிலக்கரி ஒரு வாரத்தில் தேங்கிவிடும். இரும்பு உற்பத்தியை எடுத்துக்கொண்டால் போதிய அளவு அதை உபயோகப்படுத்தவில்லை என்றால் அந்த தொழிலை ஒரு மாதத்திற்குள் மூடிவிட வேண்டியிருக்கும். ஆகவே எந்த அளவிற்கு அடிப்படையான பொருட்கள் உற்பத்தி செய்யப்படுகின்றனவோ அதைவிட அதிகமாக அதை உபயோகப்படுத்துகின்ற பிறதொழில் களும் வளர்ந்தாக வேண்டும். அந்த முறையில் பார்க்கும்போது, பொதுத்துறையில் வளரக்கூடிய அளவுக்கு தனியார் துறையிலும் தொழில்கள் வளர்ந்தாக வேண்டும். இதைத்தான் நான் பல இடங்

9th November 1961] [Sri C. Subramaniam]

களில் வற்புறுத்திக் கூறியிருக்கிறேன். ஆகவே நாட்டின் முன்னேற்றத்திற்கு நம்முடைய கொள்கையின் அடிப்படையில் பார்த்தால் தனியார் துறையும், பொதுத்துறையும் வளர்ந்தாக வேண்டும். இந்த விதத்தில் தனியார் துறையும் பொதுத்துறையும் ஒன்றுக்கொன்று பிணைக்கப்பட்டிருக்கிறது. ஒன்றை மட்டும் மிகைபடுத்தி வைத்திருக்கவேண்டும் என்றால், ஒரு வருடத்திற்கோ அல்லது இரண்டு வருடத்திற்கோ தான் வைத்திருக்க முடியும். இந்த அடிப்படையில் நாம் தொடர்ந்து சொல்ல முடியாது. இரண்டும் சேர்ந்து வளருவதின் மூலமாகத்தான் நாம் கொண்டிருக்கின்ற அடிப்படையில் நம்முடைய பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்த முடியும். ரஷ்யாவில் பொதுத்துறையில் தான் எல்லா தொழில்களும் நடக்கின்றன என்று சொன்னால் அது வேறு விஷயம். அதே போன்று வேறு பல நாடுகளில் தனியார் துறையில் தான் எல்லாத் தொழில்களும் நடக்கின்றன என்று சொன்னால் அது வேறு விஷயம். இவை இரண்டிலுமுள்ள நன்மைகளை எடுத்து நாம் அமைத்திருக்கின்ற திட்டக்கொள்கையின் அடிப்படையில் பார்க்கும்போது இரண்டு துறைகளும் ஒரேவிதத்தில் வளர்ந்தாக வேண்டும். இல்லையென்றால் தொழில்களில் எந்த விதமான வளர்ச்சியும் ஏற்பட முடியாது. அதற்கு மாறாக தொழில்களில் தேக்கம் ஏற்பட்டுவிடும். எந்த பொருளை எடுத்துக் கொண்டாலும் அதை சரியானபடி உபயோகப்படுத்தாவிட்டால், அது அப்படியே நின்று விடும். திட்டமே அவசியமில்லை என்று சொல்லக்கூடிய ஒரு வாதமும் நம்மிடையே இருந்து கொண்டு தான் இருக்கிறது. ஆனால் தொழில்களை திட்டமிட்டு வளர்த்தாக வேண்டும் என்று நாம் திட்டமிட்டிருக்கும் போது, அதில் ஒன்றுக்கொன்று முரண்படாமல் இரண்டும் ஒரே விதமாய், ஒரு வண்டியில் போகும் இரண்டு காளைகளைப்போல் தனியார் துறை, பொதுத்துறை இரண்டும் ஒரே விதமாக வளர்ந்து கொண்டிருக்கும். வண்டியில் இரண்டு காளைகளும் ஒன்று சேர்ந்து போகாவிட்டால் வண்டிக்கே ஆபத்துதான் ஏற்படும். ஆகவே இரண்டு துறைகளும் நல்ல முறையில் வளர வேண்டிய அவசியமும் ஏற்படுகிறது. அதற்கான நடவடிக்கைகளையும் எடுத்துக்கொண்டிருக்கிறோம். ஒன்றை மட்டும் நிறுத்தி வைத்துக்கொண்டு வண்டியை ஓட்ட முடியாது. இந்த அடிப்படையில், நாம் எடுத்துக் கொண்டிருக்கின்ற கொள்கையை அனுசரித்து, ஒன்றுக்கு பாதகம் ஒன்று சாதகம் என்றில்லாமல், இரண்டும் ஒரே மாதிரியாக இயங்க வேண்டும் என்ற அடிப்படையில் நாம் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறோம். நம்முடைய திட்டம் முழுவதுமே பொதுத் துறையில் தான் இருக்கவேண்டும் என்று சிலர் சொல்லலாம், அதே நேரத்தில் தனியார் துறையிலேயே திட்டங்கள் முழுவதும் இருக்க வேண்டும் என்று சொல்லலாம். அது வேறு விஷயம். ஆனால் நாம் எடுத்துக்கொண்டிருக்கின்ற கொள்கையின் அடிப்படையில், இரண்டு துறைகளும் வளர வேண்டுமென்பது தான், வேண்டுமென்றால் அதை அர்த்தநாரீசுவரக் கொள்கை என்று சொல்லலாம், அதில் தான் வாழ்க்கையின் ரகசியம் இருக்கிறது. இரண்டு சக்திகள் இல்லையென்றால் உலகத்தில் எந்தவிதமான முன்னேற்றமும் ஏற்பட முடியாது, இரண்டு சக்தியில்லை என்றால் எந்த சிருஷ்டியும்

[Sri C. Subramaniam] [9th November 1961

ஏற்பட முடியாது, இந்த அடிப்படையில் தான் அர்த்தநாரீசுவரக் கொள்கையை சொல்ல முடியும், அதன் அடிப்படையில் தான் நம்முடைய கொள்கை வகுக்கப்பட்டிருக்கிறது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இம்மாதிரி இரண்டு துறைகளும் வளரவேண்டும் என்கின்ற கொள்கையை வைத்திருப்பது பெரிய வாதத்திற்குரிய விஷயமல்ல. மற்ற நாடுகளைப் பார்த்து, அவர்கள் அடைந்திருக்கும் முன்னேற்றத்தைப் பார்த்து அதைப் போலவே நாமும் முன்னேற வேண்டும் என்பது தான் நம்முடைய நோக்கம் என்பதை நான் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அதை நிறைவேற்றுவதில் பல குறைகள் ஏற்படலாம். நானே பல குறைகளை எடுத்துச்சொல்ல முடியும். இரண்டாவது திட்டத்தில் ஐந்து மில்லியன் டன் இரும்பு உருக்கு உற்பத்தி செய்ய வேண்டும் என்று நாம் திட்டமிட்டிருந்தோம். ஆனால் நாம் இரண்டு மில்லியன் அளவைக்கூட நாம் எட்டவில்லை. அதில் தவறு இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். இதை நான் பல தடவைகளில் எடுத்துக்காண்பித்திருக்கிறேன். எங்கேயோ கோளாறு ஏற்பட்டிருக்கிறது என்பதையும் சொல்லியிருக்கிறேன். அதற்காக திட்டமே தவறு, கொள்கையே தவறு என்று சொல்லிவிட முடியாது. தனியார் துறையை எடுத்துக் கொண்டாலும் சரி பொதுத் துறையை எடுத்துக்கொண்டாலும் சரி, அதை நடத்துகிறவர்கள் எல்லாம் மந்திரிகள் அல்ல, தொழில்களை நடத்துகின்றவர்கள் தொழில் நிபுணர்கள், தொழிலில் பயிற்சி பெற்றிருக்கின்றவர்கள், இதில் ஈடுபட்டிருக்கின்ற தொழிலாளிகள் இவர்கள் தான். ஆகவே இதில் வேண்டுமென்றால் நமக்குப் போதிய அனுபவம் இல்லை என்பதை வேண்டுமென்றால் ஒப்புக்கொள்ளலாம். பொதுத் துறையில் மட்டுமல்ல, தனியார் துறையிலும் பல தவறுகள் நடைபெறுகின்றன. ஆனால் அதை அவ்வளவாக ஒருவரும் கவனிப்பதில்லை. பொதுத்துறையை எடுத்துக்கொண்டால் அது வெற்றி பெற்றுவிட்டால் ஒருவரும் கவனிப்பதில்லை. ஆனால் குறைகள் ஏதாவது நடந்து விட்டால் அதைப்பற்றி கூறுவதற்கு எவ்வளவோ வழிகள் இருக்கின்றன, அதற்காக சட்டசபை இருக்கிறது, எதிர்கட்சிகள் இருக்கின்றன. இதன் காரணமாக பொதுத்துறையில் நடைபெறும் சிறு தவறுகளைக் கூட வெளியில் பெரிதாக காட்டுகின்ற ஒரு சூழ்நிலை ஏற்படுகிறது. அதே நேரத்தில் தனியார் துறையில் ஏதாவது தவறுகள் நடந்தால் யாரும் கவலைப்படுவதில்லை. தனியார் துறையில் ஈடுபட்டிருக்கின்றவர்கள் அவர்கள் ஏதாவது தொழிலில் நஷ்டமடைந்து மூழ்கிப்போனாலும் கூட அதை யாரும் கவனிக்கமுன் வருவதில்லை. ஆகவே பொதுவாக பொதுத்துறையில் தான் அதிகமான அளவில் தவறுகள் நடக்கின்றன என்கின்ற ஒரு தவறான கருத்து பரவியிருக்கிறது. நம்முடைய அனுபவக் குறைவுகளின் காரணமாக பல தவறுகள் ஏற்படுகின்றன. அந்த தவறை நிவர்த்திப்பதற்கும், இம்மாதிரி தவறுகள் மேலும் நடக்காதவாறு பார்த்துக்கொள்வதற்கும் நாம் முயற்சி எடுக்கின்றோம். அதற்கு நாம் கடமைப் பட்டிருக்கிறோம். இந்த அடிப்படையில் நாம் மூன்றாவது திட்டத்தை அமைத்திருக்கிறோம். அதை எல்லாம் புத்தக ரூபத்தில் கனம் அங்கத்தினர்களுக்கு வழங்கப்பட்டிருக்

9th November 1961] [Sri C. Subramaniam]

றது. அதை அங்கத்தினர்கள் அனைவரும் துருவித் துருவிப் படித்திருப்பார்கள் என்று நம்புகிறேன். அதன் மீது தங்கள் கருத்துக்கள் என்ன என்பதை கூற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதற்காகத்தான் இந்த விவாதம் சபையின் முன்பு வந்திருக்கிறது. இதில் கடைசியாக ஒரு உறுதியை மட்டும் தெரிவித்துக்கொள்கிறேன். இங்கு சொல்லப்படும் கருத்துக்கள் எந்த விதத்தில் இருந்தாலும், இப்போது ஒதுக்கப்பட்டிருப்பது போதாது, 1,000 கோடி ரூபாய் ஒதுக்கப்பட வேண்டும் என்று சொன்னாலும் கூட, அதைப் பற்றி பரிசீலிப்பதற்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அது முடியுமா முடியாதா என்கின்ற காரியம் ஒருபுறம் இருந்தாலும், நாங்கள் சொல்லுவதை ஏற்றுக்கொண்டால் தான் இந்த திட்டம் சரியான முறையில் நடைபெறும் என்ற அளவில் இல்லாது, இப்போது ஒதுக்கப்பட்டிருக்கின்ற தொகையில் எந்த அளவுக்கு மாற்றம் செய்ய முடியும் என்பதையும் பரிசீலனை செய்ய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். அதோடு முடிந்த வரையில் இது தான் முடிவானது என்றில்லாமல் இதை ஏதாவது சற்று மாற்றமுடியுமென்றால், முடிந்த வரையில் நமது சக்திக்கு ஏற்ப மாற்றலாம், அதற்குச் சந்தர்ப்பம் இருக்கின்றது, பட்ஜெட் வரவிருக்கின்றது, அந்த நேரத்தில் மாற்றிக் கொள்ளலாம், அதற்கும் நமக்கு சந்தர்ப்பம் இருக்கிறது என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். ஆனால் ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். போட்டிருக்கக் கூடிய இந்தத் திட்டம் மூன்று வருஷ காலமாகப் பரிசீலனை செய்து, துருவித் துருவிப் பார்த்து, ஏற்படுத்தியிருக்கக் கூடிய திட்டம். இதற்கு மாறாக யாராவது கருத்துக்கள் சொல்லி அவைகள் ஒப்புக்கொள்ளப்படவில்லையென்றால் யாரும் குறை சொல்லக் கூடாது என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். இவ்வளவு வருஷம் விஷயம் தெரிந்தவர்களால் நன்கு ஆராயப்பட்டு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. இது ஒருவருடைய கருத்து அல்ல. நம் நாட்டிலே இருக்கக் கூடியவர்களுடைய கருத்து மட்டுமல்ல. உலகத்திலே இருக்கக் கூடிய பல்வேறு பேர்களுடைய கருத்துக்களைக் கொண்டு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்தத் திட்டத்தை மேலாகப் பார்த்து குற்றம் சொல்லாமல், அடிப்படையாக குற்றம் இருந்தால் அதை எடுத்துக் காட்டுவது 4-00 p.m. அவசியம். உண்மையான குறைகள் இருந்தால் அவைகளை என்றும் ஒப்புக்கொள்ளத் தயாராக இருக்கிறோம்—அவைகளை நீக்கவும் நாங்கள் தயாராக இருக்கிறோம் என்ற உறுதியைத் தான் இப்போது அளிக்க விரும்புகிறேன்.

இன்னும் 291 கோடி என்று போட்டிருக்கும்போது இது இந்த அளவிலேயே நின்று விடும் என்று யாரும் நினைக்கவேண்டாம். நமக்கு இருக்கும் அனுபவத்தை வைத்துக்கொண்டு நமக்கு இருக்கக்கூடிய வசதியை வைத்துக்கொண்டு இதை நாம் அதிகரிக்க முடியும். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பொறுத்தவரையில் 152 கோடி என்று அன்றைக்கு கணக்கிட்டாலும் பூரா கணக்கையும் பார்க்கும்போது 187·4 கோடி அளவுக்கு இரண்டாவது திட்டத்தை நிறைவேற்றியிருக்கிறோம். நாம் முதலில் 152 கோடி என்று கணக்கு போட்டிருந்தோம். அதற்கு மேல் நீட்டக் கூடாது என்று யாரும் சத்தியாக்கிரகம்

[Sri C. Subramaniam] [9th November 1961

செய்யவில்லை. நமக்கு திறமை இருக்கும்போது, நமக்கு ஆற்றல் இருக்கும்போது, போகப் போக நமது அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு அதைப் பெருக்கிக் கொள்ள முடியும் என்ற கருத்தை வலியுறுத்த விரும்புகிறேன். முதல் வருஷத் திட்டத்தை முடிவாக்கும் முறையிலும் கூட திட்டக் கமிஷன் சொல்லியது—அவர்கள் ஆலோசனை சொன்னார்கள்—100-க்கு 16 பங்கு வரும்படி போட்டால் போதும் என்று. நாம் சொன்னோம் 16 பங்கு போதாது, இன்னும் அதிகமாக இருக்க வேண்டும் என்று. ஆகையால் 18 பங்கு எடுத்துக்கொள்ளலாம் என்று முடிவு செய்தோம். அப்படி முடிவு செய்து நமது 6 மாத அனுபவத்தைப் பார்க்கும்போது 48 கோடியோடு கூட நிற்காது, இன்னும் 4—5 கோடி அதிகமாக ஆகும் என்று தோன்றுகிறது. இதைப் பற்றி ஓரளவுக்கு பட்ஜெட்டிலே கணக்கு கொடுக்க முடியும். இப்போது பார்க்கும்போது 18 பங்கு மட்டுமல்லாமல் 20 பங்கு அளவுக்குக் கூட போகும் என்று தெரிய வருகிறது. ஆக, 291 கோடி என்று சொல்லும்போது கணக்குக்காக வைத்திருக்கிறதே தவிர, அந்த அளவுக்குத்தான் செய்யவேண்டும், அதற்கு மேல் கூடாது என்பது அல்ல. நமது திறமையைப் பொறுத்து, நம்முடைய வசதியைப் பொறுத்து, இதை பெருக்கிக்கொண்டே போக முடியும் என்ற கருத்தை வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன்.

ஆகையால் இங்கு பல்வேறு கட்சிகள்—அதுவும் முக்கியமாக தேர்தல் வரும்போது, தேர்தல் சமயத்தில் பல்வேறு விஷயங்களைச் சொல்லவேண்டும் என்று இயற்கையாக அத்தகைய மனப்பான்மை ஏற்படுமானால் அதைப் பற்றி நான் குறையாகச் சொல்லவில்லை. அதிலும் முக்கியமாக தேர்தல் வரும்போது நிர்வாகத்தில் இருக்கக் கூடிய கட்சியின் பேரில் இருக்கும் குறைகள், இல்லாத குறைகள் எல்லாவற்றையும் சொல்லவேண்டியது எதிர் கட்சிகளுடைய பொறுப்பு—கடமை—என்று நினைக்கிறார்கள். இதைப் பற்றி கனம் அங்கத்தினர்கள் ஏதாவது குற்றம் சொல்லுவார்களானால் எந்த முறையில் சொன்னாலும் அப்போது கூட எங்களுக்கு வருத்தம் ஏற்படாது, சமீபத்தில் தேர்தல் இருக்கப் போவதால். நான் கேட்டுக்கொள்ளுவது, தேர்தல் முடிந்த பிற்பாடாவது மனப்பூர்வமாக ஒப்புக்கொண்டு தொடர்ந்து மேலும் மேலும் நிறைவேற முட்டுக்கட்டையாக இல்லாமல் நாங்களே எதிர் கட்சியில் உட்கார்ந்தாலும் சரி, அல்லது நீங்களே இருந்தாலும் சரி எல்லோரும் ஒத்துழைத்து திட்டத்தை நிறைவேற்ற முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு இந்த அடிப்படையில் கருத்துக்களை தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன். இந்தத் திட்டம் இப்போது சபையின் பரிசீலனைக்கு வைக்கப்பட்டிருக்கிறது.

DEPUTY SPEAKER : Motion moved—

"That the Third Five-Year Plan for the State of Madras be taken into consideration."

Amendments, if any, to the motion may be moved tomorrow morning. Hon. Members, who wish to move amendments, may give notice of them before 9-30 a.m. tomorrow.

9th November 1961]

* **Sri K. ANBAZHAGAN** : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, தமிழ் நாட்டினுடைய மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை, மத்திய அரசினுடைய ஒப்புதல் பெற்று நிறைவேற்ற முன் வருகிற அமைச்சர் அவர்கள் அந்தத் திட்டத்தை இப்போது சட்ட மன்றத்தின் ஆலோசனைக்கு வழங்கியிருக்கிருர்கள். இதற்கு முன்னரும் இந்தத். திட்டம் ஆலோசனைக்கு வந்திருக்கிறது அப்போதும் மாற்று கட்சிகளில் உள்ள நண்பர்களும் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் பல்வேறு ஆலோசனைகளை எடுத்துக் கூறினுர்கள். அவைகள் எந்த அளவில் நிறைவேற்றப்பட்டிருக் கின்றன என்பதை இப்போது சட்டமன்றத்தின் முன்னுல் எடுத்து வைக்கப்பட்டிருக்கிற இந்த அறிக்கை தெளிவாகத் தெரிவிக்கிறது என்று நான் நம்புகிறேன்.

இதற்கு முன்னுரை வழங்கிய அமைச்சர் அவர்கள், இந்தத் திட்டத்தைப் பற்றி பெரும் சாதனையென வாதிட்டுப் பேசுவதற்கு இடமில்லை என்ருலும் திட்டத்தினை விளக்கிப் பேசவேண்டும் என்று பேசுகிற நிலையில் "குறைகள் ஏற்பட்டால் அது இயற்கை" என்ற முடிவோடு அவர் உரையை நிகழ்த்தியிருக்கிருர். வழக்கம் போல, குறைகளே ஏற்படாது என்று தைரியமாகப் பேச வேண்டியவர்கள், குறைகள் ஏற்படக் கூடும், குறைகள் ஏற்பட்டிருக் கின்றன, குறைகள் ஏற்பட்டிருப்பது எனக்கே தெரியும் என்று பேசுகின்ருர்கள். இன்னும், பொதுத் தேர்தல் வருகிறது என்று குறிப்பிட்ட அமைச்சர் அவர்கள் அடுத்த தேர்தலுக்குப் பின்னுல் நாங்கள் இங்கு இருந்தாலும் அல்லது நீங்கள் இங்கு இருந்தாலும் யார் செய்கின்ற காரியமாக இருந்தாலும் மற்றவர்கள் பொறுப்பு உணர்ச்சியோடு ஒத்துழைக்கவேண்டும் என்று கேட்டுக்கொண் டார். அவர் இந்த விதத்தில் உரை நிகழ்த்தியதிலிருந்து, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தையேதான் இவர்கள் தேர்தலுக்கு நம்பியிருக்கிருர்களோ என்று நான் மனதில் கருது கிறேன்—அது வெற்றி தருமா என்றும் நான் சந்தேகிக்கிறேன்.

என்ருலும் அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொன்னது போல அர்த்தநாரீச்வரரைப் போன்று, உருவத்தால் மட்டுமின்றி செயலில் மீனுக்கு வாலையும் பாம்புக்கு தலையையும் காட்டுவது போன்று, அப்படிப்பட்ட கொள்கை இருக்குமானுல் அது நல்ல தல்ல என்று நான் நினைவூட்டிக்கொள்கிறேன். அரசாங்கத்தின் கொள்கை திட்டவட்டமாகத் தெளிவாக்கப்படுகிற நிலைமை ஏற் பட்டால்தான் நல்ல பலன் ஏற்படமுடியும். அவ்வப்போது ஏற்படுகிற நிலைமைகளுக்கேற்ப கொள்கைகளை மாற்றிக்கொள்ளு கின்ற சூழ்நிலை அமையுமானுல், தனியார் துறைக்குச் சலுகை காட்டுகின்ற நிலைமை ஏற்படுமானுல், பொதுத்துறையில் ஏற்று இருக்கின்ற கடமைகளை தனியார் துறைக்கு மாற்றுகின்ற நிலைமை ஏற்படுமானுல், அல்லது தனியார் துறைக்கு ஒதுக்கி வைத்திருக் கின்ற ஒன்றை வேண்டாதவன் ஒருவனுக்கு கொடுக்கக் கூடாது என்ற காரணத்திற்காகப் பொதுத் துறைக்கு மாற்றுகின்ற நிலைமை ஏற்படுமானுல்—மாநில அரசில் நாங்கள் அப்படி செய்வதில்லை என்று அமைச்சர் அவர்கள் சொல்லக் கூடுமானுலும் பேரரசைப் பொறுத்த வரையில் அந்த அளவுக்கு மாற்றங்கள் ஏற்படுகின்ற

[Sri K. Anbazhagan] [9th November 1961

காரணத்தால், அவ்வப்போது கொள்கைகளை மாற்றிக் கொள்ளுகின்ற நிலைமையில் இப்படிப்பட்ட திட்டங்கள் பழையபடி பயன் தராது போகும் என்பதை நான் நினைவூட்டிக்கொள்ள விரும்புகிறேன்.

முதலில், இப்படிப்பட்ட திட்டக் குழுவில்--திட்டக் குழுவினிடம் சென்று நமது மாநிலத்தினுடைய பங்கைக் கேட்கும் பெரும் பொறுப்பை கொண்டிருக்கிற அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள்கூட இல்லையே என்பது வருத்தப்படவேண்டியதாக இருக்கிறது. மாநிலத்தின் சார்பில் அவர்கள் திட்டக் குழுவின் உறுப்பினராக இருந்தால்தான் தமிழ்நாட்டுக்கு நியாயமான பலன் கிடைக்கக்கூடும். எதிலும் எப்போதும் பிச்சை எடுக்கின்ற எண்ணம் தானா என்று அமைச்சர் கேட்பார்—ஆனால் அமைச்சர் அவர்கள் உரையைக் கேட்டுக்கொண்டிருந்த நேரத்தில் எனக்குத் தோன்றியது, அவரே அந்த இடத்தில் இருந்தால் ஓரளவு அதிகப் பலன் கிடைக்கும் என்ற எண்ணம் தான். இப்போது திட்டக் குழு பண்டித நேருவின் தலைமையில் இயங்கி வருவதால் திட்டக் குழுவின் கருத்துக்கள் பாராளுமன்றத்தின் பரிசிலனையிலும் சரி, அல்லது சட்ட மன்றத்தின் பரிசிலனையிலும் சரி முழு அளவு பரிசிலனை செய்யப்பட்டு மாற்றுக் கருத்துக்கள் ஏற்கப்படக் கூடிய அரிய வாய்ப்பை இழந்து விடுகிறது. இதனால் மற்றவர்கள் எடுத்துச் சொல்லும் கருத்துக்கள் இடம் பெறாமல் போகின்றன, குறைகளும் குற்றச்சாட்டுகளும் ஒதுக்கப்படுகின்றன என்று நான் நினைவூட்டிக்கொள்கிறேன். பண்டித நேருவுக்குப் பதிலாக—அகில இந்திய அரசின் பிரதமர் இக்குழுவின் தலைவராக இருப்பதற்குப் பதிலாக—வேறு ஒரு நிபுணர் இருந்தால், ஒரு நிபுணரின் தலைமையில் செயலாற்றினால், அது ஜனநாயகத் தன்மைக்கு ஏற்றதாக இருக்கும் என்று நான் கருதுகிறேன்.

திட்டக்குழு அகில இந்தியாவுக்கு என்று அழைக்கப்படுகிற காரணத்தினால், மத்திய சர்க்காரால் டில்லி ஆட்சி பீடத்திற்கு நெருங்கியிருக்கின்றவர்கள் அதில் இடம் பெறுகிறார்கள். மாநிலத்தில் பிரதிநிதிகள், முக்கியமாக தமிழ்நாடு அரசாங்கம், ஆந்திர அரசாங்கம் என்ற இப்படிப்பட்ட மாநில அரசாங்கங்களிலிருந்து ஒவ்வொரு பிரதிநிதி வீதம் திட்டக் குழுவில் இடம் பெற வழிவகை காணப்படவில்லை. மாநிலத்துக்கு ஒரு பிரதிநிதி என்று இருந்தால்தான் அந்தத் திட்டத்தினால் கிடைக்கும் பலன்கள் எல்லாப் பகுதிகளுக்கும் எளிதாக கிடைக்க முடியும். திட்டக் குழுவிடம் அணுகி நேரில் ஒரு நாள் வேண்டுகோளை எடுத்துச் சொல்வதைவிட குழுவில் உறுப்பினராக இடம்பெற்றால் தான் மாநில அடிப்படையில் கிடைக்க வேண்டிய பலன் கிடைக்க முடியும்.

அது மட்டுமல்லாமல், இவ்வளவு பெரிய அளவில் மத்திய அரசு திட்டங்களை நிறைவேற்றுவதால் மாநில அரசாங்கத்தினர் ஆண்டு தோறும் இங்கு கொண்டுவரும் நிதி நிலை அறிக்கை மூலம் பெரிய அளவுக்குத் திட்டமிட முடியாமல் இதுவே தடையாக அமைந்து விடுகிறது. மத்திய சர்க்கார் திட்டக்குழு மூலமாகப் பெரும் திட்டங்களைப் போடுகிற காரணத்தினால் மாநிலத்தில் என்றுமே

9th November 1961] [Sri K. Anbazhagan]

எந்தத் திட்டமும் போட முடியாமல் தடையாக இருக்கிறது. ஆனால அமைச்சர் அவர்கள் எடுத்துச் சொன்னார், மாநில அரசினர் எச்சரிக்கையாக இருந்து உரிய பங்கைப் பெற்று வந்திருக்கிறார் கள் என்று. 291 கோடிக்கு அனுமதி பெற்றிருக்கிறோம் அது சாதா ரணமா, இன்னும் இதை உயர்த்தக் கூட எங்களால் முடியும் என்று அமைச்சர் குறிப்பிட்டார். அந்தத் தொகையிலே எப்படி நியாய மான அளவு நமக்குக் கிடைத்தது என்பதை கனம் அமைச்சர் கணக்குக்காட்ட முன்வருகிறார். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே மாநில அரசுகள் துறைக்கு 3,725 கோடி ரூபாய் ஒதுக்கி இருக்கின்றபோது, அதிலே நமக்கு கிடைத்திருக்கக்கூடிய 291, கோடியை மட்டும் வைத்துக்கொண்டு ஏறத்தாழ 12-ல் ஒரு பங்கை நாம் திட்டத் தொகையாகப் பெற்றிருக்கிறோம் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் வாதிட்டுச் சொல்ல முடிகிறது. அதே போல் மத்திய அரசாங்கத் துறைக்கென்று ஒதுக்கியுள்ள தொகை 3,775 கோடி. இந்த 3,775 கோடியில் நம்முடைய தமிழ்நாட்டுக்கு என்று எவ்வளவு கோடி திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதைத் தெளிவாகத் தெரிவிக்கும்படி நான் கனம் அமைச்சர் அவர்களை வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். இந்த 3,775 கோடியில் நமக்கு கிடைக்க வேண்டிய பங்குத் தொகையில் 4-ல் ஒரு பங்கு அளவு கூடக் கிடைக்கவில்லை என்பதை வற்புறுத்திச் சொல்ல விரும்புகிறேன். மத்திய அரசினத் துறையில் முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலே செலவிட்டது வெறும் புள்ளிதான். இரண்டாவது திட்டத்திலேயும் திருநாமந்தான். மூன்றாவது திட்டத்திலே பல ஆயிரம் கோடியில் மிச்சம் கிடைத்தது தனுக்கோடிதான். தயவு செய்து புள்ளி விவரத்தோடு, இதிலே 12-ல் ஒரு பங்கு நம்முடைய மாகாணத்திற்கு கிடைத்ததா என்று அமைச்சர் சொல்ல வேண்டும்.

இப்போது புதிய தொழிற்சாலைகளும், அதற்கான திட்டங் களும் போடப்பட்டு பெரு வளர்ச்சி அடைந்திருப்பதாகப் பேசு வார்களானால், அதிலே எவ்விதப் பயனும் இல்லை. அத்தொழிற் சாலைகள் எல்லாம் நல்லமுறையில் உருவாகிப் பலன் கிடைக்க வேண்டும். ஆனால் அதற்குக்கூட அகில இந்திய அடிப்படையில் 'பிரைவேட் செக்டார்' தனியார் துறைக்கென திட்ட அளவில் 4,000 கோடி என்று ஒதுக்கப்பட்டு விடுகிறது என்று சொன்னால், சென்னை மாகாணத்திற்கு என்று அதில் பங்கு எவ்வளவு கிடைக்கிறது என்பதைச் சற்றுக் கவனித்துப் பார்க்க வேண்டும். அதேபோல் மற்ற மாநிலங்களுக்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டிருக் கிறது என்பதையும் கவனிக்கவேண்டும். மேலும் முதல் திட்டத் தில் தனியார் துறையில் எவ்வளவு ஒதுக்கப்பட்டது, இரண்டாவது திட்டத்திற்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டது, மூன்றாவது திட்டத் திற்கு எவ்வளவு ஒதுக்கப்பட்டது என்பதையெல்லாம் கணக் கிட்டுப் பார்த்தால் அதிலேயும் முன்னேற்றம் காணப்படவில்லை. ஆனால் தொழிலுக்கான மூலப்பொருள் கிடைக்குமிடங்களில்— மாநிலங்களில்—தொழில் நடத்த நிதி ஒதுக்கப்படுகிறது என்று கூறியிருக்கின்றனர். மாகாணங்களில் தொழில் நடத்த மத்திய சர்க்கார் தொகை ஒதுக்குகிறார்கள். அப்படி ஒதுக்கப்

[Sri K. Anbazhagan] [9th November 1961

படுகின்ற தொகையின் விவரத்தைப் பார்த்து, அதன்படியும் 12-ல் ஒரு பங்கு தொகை கிடைத்திருக்கிறது என்று சொன்னால், அது மகிழ்ச்சிக்குரியதாக இருக்கும்.

அதுமட்டுமல்ல. இந்த திட்டம் எப்படி எப்படி உருமாறுகிறது என்பதை நான் இந்த நேரத்தில் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தைப்பற்றி முதலிலே அறிக்கை வந்தது. அந்த நேரத்திலே மத்திய அரசு துறையிலே 2,150 கோடி என்றும், மாகாண அரசாங்கத்திற்கு 3,850 கோடி என்றும், தனியார் துறையிலே 4,500 கோடி என்றும் தெரிவிக்கப்பட்டது. 2,150 கோடி என்று இருந்த மத்திய அரசுத்துறை தொகை வளர்ந்து இப்போது 3,725 கோடி என்று உயர்ந்துள்ளது. அப்படி 3,725 கோடி என்று மத்திய அரசுத் தொகை உயருவதைப் போல் மாகாண அரசு துறையின் அளவும் உயர்ந்தால், அதை திட்டத்தின் முன்னேற்றம் என்று சொல்லலாம். அதே சமயத்தில் மாகாணத்தின் பங்கு 150—125 கோடி குறைந்து தான் இருக்கிறது. மாகாணங்களின் தொகை உயர்ந்து மத்திய சர்க்காரின் தொகை குறைந்தால், அது ஜனநாயகத்திற்கு ஏற்றது என்றுகூடச் சொல்ல முடியும். அதேபோல் மத்திய சர்க்கார் தொழில்களுக்குப் போடும் முதலீட்டை நினைக்கும்போது, அவர்கள் முதலீடுகள் எல்லாம் பல கோடிகளில் இருக்கிறது. மாகாணத்தின் முதலீடோ 3 கோடி, 4 கோடி அளவில்தான் இருக்கிறது. அந்த அளவுக்குத்தான் மாகாணத்திற்கு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி நினைத்துப் பார்க்கும்போது, அகில இந்திய தொழில்துறை அடிப்படை என்று சொல்லிக்கொண்டு அதிலே நிலக்கரி இரும்பு போன்ற கனிகளை எடுக்கும் சுரங்கங்களையும் சேர்த்து 3,725 கோடி என்று சொன்னால், என்றைக்கும் எந்தக் காலத்திலும் மாகாண அரசினர் மத்திய அரசை நம்பி எதிர்பார்த்தே இருக்க வேண்டுமென்ற அவசியத்தை உண்டாக்குகிறார்கள் என்பது விளங்குகிறது. மாகாண அரசாங்கங்கள் மத்திய அரசை நம்பியே தங்களுடைய தொழில் துறையை நடத்த வேண்டும் என்ற அளவுக்குத்தான் நிலைமை இருக்கிறது. இதை அமைச்சர் அவர்கள் உணர்ந்து, இப்படி 3,775 கோடி ரூபாய் மத்திய சர்க்கார் துறைக்கு மட்டும் ஒதுக்கிக் கொள்வது நியாயமல்ல என்பதை எடுத்துச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறார்கள் என்று கருதுகிறேன்.

இதேபோல் மற்றொரு வகையில் மத்திய சர்க்கார் துறையிலே இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஒதுக்கப்பட்ட தொகை 870 கோடி ரூபாய். இந்த 870 கோடி ரூபாயில் நமது மாகாணத்திற்கு செலவழிக்கப்பட்ட தொகையோ ஒரு சில கோடிதான் அதேபோல் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே இந்தத் துறைக்கு என்று ஒதுக்கப்பட்டுள்ள தொகை 1,520 கோடி இதில் நம்முடைய மாகாணத்தின் பங்கு எவ்வளவு என்பதைப் பார்க்க வேண்டும். இதிலேயும் நமக்கு ஏமாற்றந்தான். நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டம் எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது என்பதை மட்டும் சொல்லிக் கொண்டு, சேலத்தில் உள்ள இரும்பு ஆராய்ச்சிக்கு விடப்பட்டிருக்கிறது என்று கூறப்பட்டு, இதற்கென 25 கோடி மட்டும். ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதையெல்லாம்

9th November 1961] [Sri K. Anbazhagan]

கணக்கில் எடுத்துப் பார்க்க வேண்டும். இதுவரையிலும் நமக்கு மத்திய அரசாங்கத்துறையில் தொழில்களுக்கு மட்டும் எவ்வளவு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது? எவ்வளவு பணம் செலவழிக் கப்பட்டிருக்கிறது என்பதையும், இதிலே போடப்பட்ட மூலதனத் தொகை எவ்வளவு என்பதையும் அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

இதேபோலத் தான் ரயில்வே போக்குவரத்துத் துறையிலேயும் நாம் மிகவும் ஒதுக்கப்பட்டிருக்கிறோம். தமிழ்நாட்டைப் பொறுத்த அளவிலே புதிய ரயில் பாதை போடுவதற்கான அறி குறியே காணப்படவில்லை. அதேபோல் தூத்துக்குடித் துறை முகத் திட்டமும் இன்றுவரை செயற்படாமல் கைவிடப்பட்டிருக் கிறது. விழுப்புரம் மின்சார ரயில் பாதை திட்டம் இன்றையத் தினம்வரை ஓடக்கூடிய தண்டவாளம்கூட போடப்படாமல் காலம் நீட்டிக்கப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட நிலைமையிலே தமிழ் நாட்டிலே போக்குவரத்துத் துறையிலே பல திட்டங்கள் கைவிடப் பட்டிருக்கின்றன.

மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களையும் எடுத்துக்கொண்டால், முதல் திட்டத்தில் 5 கோடி, 3 கோடி அளவு கொடுத்துவிட்டு, இரண் டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நிலக்கரி எடுப்பதற்காக 40 கோடி, அதேபோல் கோச் பாக்டரிக்கு 8 கோடி, சென்னை துறை முகத்திற்கு 16 கோடி என்ற அளவிற்கு மட்டுமே ஒதுக்கி இருக் கிறார்களே தவிர, பெருமளவிற்கு எந்தத் துறைக்கும் ஒதுக்க வில்லை.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயாவது இவைகட்கு உரிய தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால், அதிலே யும் இல்லை. நம்முடைய நாட்டிலே உள்ள பின்தங்கிய நிலைமையை மாற்றக்கூடிய அளவிற்காவது இதில் வழிவகை செய்யப்பட்டிருக் கிறதா என்றால், அதற்கு எவ்வித வழிவகையும் காணவில்லை.

அது மட்டுமல்ல. இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆராய்ந்து வெளியிடுகிறபோது அவர்களே சொல்லி இருப்பது இது. இதுவரையில் போடப்பட்ட திட்டங்களில் தேசிய வரு மான உயர்வு முதல் திட்டத்திலே எதிர்பார்த்த அளவு 12 சதவிகி தம் என்றும், அது 18 சதவிகிதமாக உயர்ந்தது என்றும்; ஆனால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே எதிர்பார்த்த உயர்வு 25 சதவிகிதம் என்றும், மாறாக அது 20 சதவிகிதந்தான் உயர்ந்தது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இது அவர்கள் எந்த லட்சி யத்தை நிறைவேற்ற வேண்டுமென்று திட்டம் போட்டார்களோ, அதை நிறைவேற்ற முடியவில்லை என்பதை எடுத்துக் காட்டுகிறது. அதனாலே இவர்கள் போடுகின்ற திட்டங்களிலே எல்லாம் முழுப் பலன் கிடைக்குமா என்ற சந்தேகம் ஏற்படத்தான் செய்யும்.

அதேபோன்று Per-capita Income அதாவது சராசரி வருமானம் அகில இந்தியாவில் இந்தப் பத்து ஆண்டு காலத்தில் 16 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. கடந்த ஐந்தாண்டுக் காலத்தில் 306 ரூபாயிலிருந்து 330 ரூபாய்க்கு வந்திருக்கிறது. அதாவது

[Sri K. Anbazhagan] [9th November 1961]

1956 முதல் 1961 வரை ஏறத்தாழ 8 சதவிகிதம்தான். ஆனால் அதே நேரத்தில் விலைவாசி எந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்று பார்க்க வேண்டும். ஜெனரல் இன்டெக்ஸ் ஆப் ஹோல்-சேல் பிரைஸஸ் (General Index of whole sale prices) மொத்த விலை புள்ளி எந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறது என்று பார்த்தால், கடந்த ஐந்தாண்டு காலத்தில் அதாவது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 30 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. உணவுப்பொருள்கள் மட்டும் 27 சதவிகிதம் உயர்ந்திருக்கிறது. இன்டஸ்ட்ரியல் ரா மெடிரியல்-தொழில் மூலப்பொருள் 45 சத விகிதம் உயர்ந்திருக்கிறது.

இவ்வாறு மக்களின் அன்றாடத் தேவையான பொருள்களின் விலைவாசி கடந்த ஐந்தாண்டுக் காலத்தில் 27 சதவிகிதத்திலிருந்து 30 சதவிகிதம்வரை உயர்ந்திருக்கிற நிலையில் மக்களின் சராசரி வருமானம் 8 சதவிகிதம்தான் உயர்ந்திருக்கிறது என்று சொன்னால் திட்டத்தால் பொதுமக்களுக்குக் கிடைத்த பலன் என்ன? இந்த வருமான விகிதத்திலும் மிகப் பெரிய செல்வர்கள் உள்ளார்கள். ஆலை அரசர்கள், ஜமீன்தார்கள் இருக்கிறார்கள். இவர்களையெல்லாம் நீக்கிவிட்டுப் பார்த்தால், சாதாரண ஏழை மக்களின் சராசரி வருமான உயர்வு இன்னும் குறைவாகத்தான் காணப்படும். ஆனால் அதே நேரத்தில் 25 அல்லது 30 சத விகிதம் விலைவாசிகள் அதிகரித்துக் கொண்டு இருக்குமானால், இந்தத் திட்டங்கள் போடுவதின் நோக்கம் எப்படி வெற்றியடைய முடியுமென்று நான் கேட்க விரும்புகிறேன்.

அதிலும் தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் இந்த விலைவாசி பம்பாய், கல்கத்தா, டெல்லி போன்ற நகரங்களைவிட சென்னையிலேயே அதிகமாக இருந்திருக்கிறது. இந்த விலைவாசியானது தமிழ் நாட்டிலே உள்ள சராசரி வருமான நிலைமைக்கு ஒத்த வகையில் இருந்தாலாவது அதை எடுத்துக் காட்டி, அப்படித் தமிழ் நாட்டிலே விலைவாசியானது அதிகமாக இருந்தாலும், அதற்குத் தகுந்த முறையிலே அவர்களின் வருமானமும் உயர்ந்திருக்கிறது என்று எடுத்துக் காட்டி, அதுபற்றி அமைச்சர் பெருமையாகப் பேசலாம். அப்படியாவது இருக்கிறதா என்று அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். முழு வயிற்றுக்குச் சோறு இல்லாவிட்டாலும், இன்றைக்கு மனிதன் வெண்மையாக உடை உடுத்தப் பழகிவிட்டான்.

அதேபோல் குந்துவதற்கு நல்ல குடிசை இல்லாவிட்டாலும், குடிசைக்கு முன்னாலே சாணம் போட்டு மெழுகி, கோலமிடப் பழகி விட்டான். கூந்தலுக்கு எண்ணெய் தேய்த்துக் கொள்ள வசதி இல்லாவிட்டாலும், வெறும் காகிதப் பூவையாவது சூட்டிக் கொள்ளப் பெண்கள் பழகி விட்டார்கள். இதைப் பார்த்து முன்னேற்றம் என்று எண்ணிக்கொண்டு, அதனால் பர் காபிடா இன்கம், சராசரி வருமான அளவும் உயர்ந்து விட்டது என்று சொல்வதில் எவ்விதப் பயனும் இல்லை. அதே நேரத்திலே இன்றையத் தினம் விலைவாசி எவ்வளவு தூரத்திற்கு உயர்ந்திருக்கிறது என்பதையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்.

9th November 1961] [Sri K. Anbazhagan]

இப்படிப்பட்ட விலைவாசி உயர்வினால் யாருக்கேனும் நன்மை ஏற்பட்டிருக்கிறது என்றாவது சொல்ல முடியுமா? அதுவுமில்லை இன்றைக்கு இதனால் பொதுமக்கள் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளனர் என்பதை மிகவும் வருத்தத்தோடு, மன வேதனையோடு கூற விரும்பு கிறேன்.

அதேபோல் தொழிலாளர்களை எடுத்துக்கொண்டால், காஸ்ட் ஆப் லிவ்விங் இன்டக்ஸ் பார் ஒர்கர்ஸ், தொழிலாளிகளின் அன்றாடச் செலவுப்புள்ளி 1956-ல் 100-ஆக இருந்தது, இப்போது 124 ஆக உயர்ந்துள்ளது. இது அகில இந்திய அடிப்படையில் கொடுத்துள்ள புள்ளி விவரம். தமிழ்நாட்டை எடுத்துக் கொண்டால் இன்னும் அதிகமாகவே இருக்கும். இந்தவிதமான நிலைமையில், மூன்றாம் ஐந்தாண்டுத் திட்டத்திலே மக்கள் மகிழ்ச்சி அடைய வேண்டுமென்று சொன்னால், எப்படி முடியும்? இந்தத் திட்டத்திலே பின்தங்கிய நிலையில் இருப்பவர்களுக்கு இன்னின்ன திட்டங்களை வகுத்திருக்கிறோம், அதனால் அவர்களுடைய நிலையை இந்த அளவுக்கு உயர்த்த முடியும் என்று சொன்னாலாவது ஓரளவுக்கு மக்கள் மகிழலாம். அதற்கு ஏது இடம்?

திட்டம் என்று சொன்னவுடன், அது தனியார் துறை சம்பந்தப்பட்டதா, சர்க்கார், மக்கள்துறை சம்பந்தப்பட்டதா, அது மத்திய அரசு சம்பந்தப்பட்டதா, மாநில அரசு சம்பந்தப்பட்டதா, இந்தத் திட்டத்தினால் முதலாளிகளுக்கு அதிக நன்மையும் லாபமும் கிடைக்குமா, ஏழைகளுக்கு அதிக நன்மைகள் கிடைக்குமா; இந்தத் திட்டத்தில் நேரடியாக நம் நாட்டினுடைய பொருளாதார வளர்ச்சிக்குப் பயன்படக்கூடிய வகையில் மூலத் தொழில் கருவிகள் உற்பத்தி செய்யப்படுமா அல்லது கன்சம்ஷன் குட்ஸ்—மக்கள் தேவைக்கான பொருள்கள் மட்டும்தான் உற்பத்தி செய்யப்படுமா என்று ஒவ்வொரு துறையிலும் இந்தத் திட்டத்தைப் பற்றி அலசிப் பார்த்து, அவைகளை எடுத்துக் கூற கனம் அமைச்சர் அவர்கள் முன் வந்திருக்க வேண்டும். அவைகளை அலசிப்பார்த்து நிகரத்திலே இத் திட்டத்தால் இவ்வளவு நன்மை என்று சொல்வார்களேயானால், இந்த மூன்றாவது திட்டத்தையாவது வரவேற்கலாம். இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் பெயர் அளவுக்குப் பல திட்டங்களைப் போட்டு நிறைவேற்றுகிறோம் என்று பொது மக்களிடத்தில் ஆசை வார்த்தைகள் சொல்லப் பயன்படுமே தவிர, வேறு எந்த வகையிலும் பெரிய பலனை அளிக்காது என்பதை நினைவூட்ட விரும்புகிறேன். இப்படிப் பேசுகிற கருத்து இன்றைக்கு மட்டும் பேசப்படுவது அல்ல; திட்டத்தை தகர்ப்பதற்கும் அல்ல; இந்தியாவுக்கு திட்டம் கூடாது என்று சொல்லுவதற்கும் அல்ல; தாய் நாடு திராவிடநாடு விடுதலைக்கு ஆதாரம்தேடும் அடிப்படையில் பேசுவதும் அல்ல. இந்தியாவுக்கு மட்டுமல்ல, அகில உலகத்திற்கும் திட்டம் தேவை

ஆப்பிரிக்கா நாட்டிற்குக் கூட திட்டம் தேவை. எங்கெங்கே மனிதன் இருந்தாலும் முறைப்படி திட்டமிட்டு அதற்கு இசைந்து அவன் வாழவேண்டும் என்று கருதுவது தவறு அல்ல. ஆனால், திட்டத்தின் பெயரால் அரசாங்கத்தின் அதிகாரம் வளர்ந்து

[Sri K. Anbazhagan] [9th November 1961

கொண்டே போய், தனி மனிதனுடைய உரிமைகள் பரிக்கப்படுகின்றன என்ற கட்டம் ஏற்படுமேயானல், அதை எந்த ஜனநாயகவாதியும் ஏற்றுக் கொள்ளமாட்டான். அமைச்சர் அவர்கள் ரஷ்யா முன்னேறியிருக்கிறது என்று சொன்னர்கள். ப்ரெஞ்சு நாடு முன்னேறியிருக்கிறது, தொழில் துறையிலே வளம் பெற்றிருக்கிறது என்றும் சொன்னர்கள். என்ன காரணம் அவர்கள் சொன்னர்கள் என்று எனக்குப் புரியவில்லை.

அதிலே ஒரு காரணம் ப்ரெஞ்சு நாடு அளவிலே சின்ன நாடாக இருப்பதால் மிக நன்ருக முன்னேறக்கூடிய வாய்ப்பு அதற்கு இருக்கிறது. ஜப்பான் நாடு சிறிய நாடாக இருக்கிற காரணத்தினுல், எவருக்கும் கடன்படவேண்டிய தேவை இல்லாமல் வளர முடிகிறது. சிறிய நாடுகளுக்கு சில வாய்ப்புகள், பெரிய நாடுகளுக்கு வேறு சில வாய்ப்புகள். பெரிய நாட்டு அரசுகளுக்கு ஏற்படும் அதிகாரம் தனி மனிதன் முன்னேற்றத்திற்குப் பெரிய அளவுக்குத் துணை செய்வதில்லை. மாருக சர்வாதிகாரத்திற்கு வேண்டுமானுல் துணை நிற்கும்; எதேச்சாதிகார மனப்பான்மையை வளர்க்க துணை நிற்கும். மத்திய அரசாங்கத் திட்டம் என்ற பெயரால் மாகாண அரசாங்கங்களை வெறும் மாவட்ட ஆட்சி மன்றங்களாக மாற்றுவதற்குத்தான் அது பயன்படும். அதே நேரத்திலே சிறிய நாடுகள் என்ற காரணத்தினுல் உலகத்திலே முன்னேறியிருக்கிற நாடுகளையும் பார்க்கிருேம். நாமோ பெரிய நாட்டின் ஒரு பகுதியாக ஒட்டிக்கொண்டிருக்கிருேம். அதனுலேயே நம்முடைய மக்கள் நிம்மதி அடையும் அளவுக்கு முன்னேற முடியவில்லை என்பதைப் பார்க்கிருேம்.

இதை அமைச்சர் அவர்கள் எண்ணிப்பார்த்து, ப்ரெஞ்சு நாடு முன்னேற முடிந்ததுபோல்—தமிழ்நாடு முன்னேற பிரிவதற்கான உரிமையும், எதிர்க்கட்சியின் ஆற்றலும்கூட இருக்கட்டும்—இப்பொழுது அமைச்சர் அவர்களுக்கு உள்ள ஆற்றலை வைத்து தமிழ் நாட்டிற்கு இவ்வளவு பங்கு என்பதைத் திர்மானித்து அதை இந்தத் துறைகளிலே பெறவேண்டும் என்று வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்து நான் தெரிவிக்க விரும்புவது, எவ்வளவோ திட்டங்களை நிறைவேற்றப்போகிருேம் என்று அடிக்கடி சொன்னுலும், அவைகளை நிறைவேற்றுவதற்கு வழிவகை காணவில்லை. தமிழ் நாட்டில் அணு உலைக் கூடம் ஏற்பட வேண்டுமென்ற கருத்து தெரிவிக்கப்பட்டது. அணு உலைக் கூடம் ஏற்படுத்தி, மின்சார உற்பத்தியைப் பெருக்க வேண்டியது மிகவும் அவசியம் என்றும் தெரிவித்தார்கள். இடையே அதைத் தளரவிட்டார்கள்.

மூன்று ஆண்டுகளுக்கு முன்னுல் ஒரு புதிய ஆர்வம், இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் அந்த ஆர்வக் குறைவு, மறுபடியும் அதை வற்புறுத்தத் தவறிய நிலைமை. எதிர்க்கட்சிகளுக்குத் தந்த விளக்கமோ, "மற்ற மாநிலங்கள் அணு பரிசோதனை செய்து பார்க்கட்டும் நன்மையாக இருந்தால் எடுத்துக்கொள்ளலாம்" என்று பதிலளித்ததனுல் ஏற்பட்ட நிலைமை. மூலப்பொருள்கள் கிடைக்கும் இடத்தில் தொழில் துவங்குகிருேம் என்று சொல்லி

9th November 1961] [Sri K. Anbazhagan]

வருவதால், தென்னாட்டில் அணு உலைக் கூடம் ஏற்படுத்துவதற்குத் தேவையான மூலப் பொருள்கள் இருப்பதினால் இங்கே அணு உலைக் கூடம் ஏற்படுத்த வேண்டும் என்று மத்திய அரசாங்கத்தினிடம் வற்புறுத்திக் கேட்டுப் பெற்றிருக்கலாம்.

அதேபோலத்தான் தூத்துக்குடி துறைமுகத் திட்டத்தைப் பற்றி, அந்தப் பிரச்னை வரும்போதெல்லாம் அமைச்சர் அவர்கள் உறுதி சொல்லிக்கொண்டிருந்தார்கள். மத்திய அரசாங்க அமைச்சர் டாக்டர் சுப்பராயன் அவர்கள், இந்தத் திட்டத்தைப் பற்றி சொல்லுகிறபொழுது அதை எப்படியும் நிறைவேற்றி விடுவோம் என்று சொன்னார்கள். வேறு ஒரு அமைச்சர் இதைப் பற்றிச் சொல்லுகிறபொழுது சேதுக் கால்வாய் திட்டத்தோடு இணைக்கப்பட்டு இந்தத் திட்டம் நிறைவேறவேண்டும், அப்படி இணைக்கப்படாமல் நிறைவேற்றினால் பலன் இருக்குமா என்று சந்தேகப்படுவதாக ஒரு ஐயப்பாட்டை கிளப்பினார்.

இம்மாதிரி தூத்துக்குடி துறைமுகத் திட்டம் எடுத்துக்கொள்ளப்படும் கட்டத்தில் அதை எடுத்துக்கொள்ளலாமா என்ற ஐயம் அரசினரால் கிளப்பப்படுகிறது. இதற்காகத் தனித்தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால், மத்திய அரசாங்கம் வெளியிட்டிருக்கிற ஏட்டில் இதைப்பற்றி எந்தக் குறிப்பையும் காணோம். அதேபோல் சேதுக் கால்வாய் திட்டம் இதோடு இணைக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டால், தமிழ் நாட்டிற்கு மட்டும் மல்ல, அகில இந்தியாவுக்கும் கப்பல் போக்குவரத்துச் செலவு குறையும், அந்தப் பெரும் வசதி செய்து தருவதாக அது இருக்கும். ஆனால், சேதுக்கால்வாய் திட்டம் இதிலே சேர்த்துக்கொள்ளப்பட வில்லை. நெய்வேலி வளரப்போகிறது என்று சொன்னால், பக்கத்தில் இருக்கிற துறைமுகங்களான கடலூர், பரங்கிப்பேட்டை ஆகியவை சீர்திருத்தப்பட்டிருக்கவேண்டும். அதற்கும் இத்திட்டத்தில் வழி காணவில்லை.

காவேரி வட்டத்தில் எண்ணெய் ஆராய்ச்சிக்கூடம் ஏற்படுத்துவது பற்றி தெளிவாக முடிவு எடுக்கப்படவில்லை. அதைப்பற்றி குறிப்பு ஒன்றும் தரப்படவில்லை. அதோடு அல்லாமல் எண்ணெய் தூய்மி ( Oil Refinery ) நிலையம் தேவை. அம்மாதிரி எண்ணெய் தூய்மி நிலையத்தை இப்பொழுதுகூடத் தமிழ்நாட்டில் ஏற்படுத்தவேண்டும் என்று பலதடவை சட்டமன்றத்தில் எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

அதை எண்ணிப்பார்த்து அந்தத் திட்டத்தை நிறைவேற்ற இசைந்திருந்தால், உண்மையிலேயே அதனால் பலன் ஏற்படும். அம்மாதிரி எண்ணெய் திட்டம் நிறைவேற்றப்பட்டிருந்தால் தஞ்சை மாவட்டத்தில் ஒரு பெரிய தொழில் தோன்றுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்கும். தமிழ் நாட்டிலே வேறு எந்த இடத்திலே அம்மாதிரி எண்ணெய் தூய்மி நிலையம் ஏற்படுத்தினால்கூட, அதற்குப் பின்னர் அது பல விதத்திலும் முன்னேற்றத்திற்கு துணையாக இருக்கும் என்று வற்புறுத்தியிருக்கவேண்டும்.

[9th November 1961

**THE HON. SRI C. SUBRAMANIAM :** தஞ்சாவூரில் தான் இருக்க வேண்டுமா . . .

**SRI K. ANBAZHAGAN :** இடம் எனக்குத் தெரியாது. நான் நிபுணன் அல்ல. நிபுணர்களோடு நெருங்கிப் பழகுகிறவர்களுக்குத்தான் இடம் தெரியும். என்னுடைய கருத்து தமிழ் நாட்டில் இருக்கவேண்டுமென்பதுதான். தமிழ் நாட்டில் கிழக்கு மேற்கு பார்க்க நாங்கள் ஆரம்பிக்கவில்லை. தமிழ் நாட்டில் எந்த இடமானாலும் சரி. அந்த இடம் அதற்கு ஏற்றபடி வசதியாக இருந்தால் அங்கே அமைக்கலாம். தமிழ் நாட்டில் ஏற்படுத்தவேண்டுமென்பதுதான் கருத்து.

கனரக மின்சாரத் தொழிற்சாலை ஒன்று இங்கு தான் வரப் போகிறது என்று பலதடவை சொல்லியும், பின்னால் அது கைவிடப் பட்டுவிடுமோ என்று ஐயுறுகிறேன். இங்கே ஒரு ஹெவி பாய்லர் பிளாண்டு மட்டும், திருச்சி, பொன்மலைப் பகுதியில் வைக்கப்போவதாகத் தெரிகிறது. அப்படி இங்கே வைப்பதாக இருந்து தொழில்கள் கைவிடப்படுகின்றன. ஆவடியில் மத்திய அரசாங்க ராணுவத் தளவாட உற்பத்திக்கு துணையாக இருக்கக்கூடிய, ராணுவத் தொடர்பான ஒரு பெரிய தொழிற்சாலை ஏற்படுத்தப்படும் என்று தெரிவிக்கப்பட்டு, பின்னால் அது எப்படியோ இன்றுவரை கைவிடப் பட்டிருக்கிறது. (குறுக்கீடு). அதைப் பற்றி எந்தக் குறிப்பும் இதில் இல்லை. கைவிடப்படவில்லை என்று கூறும் அமைச்சர் அவர்கள் வேண்டுமானால் குறிப்பு கொடுக்கட்டும். அமைச்சர் அவர்கள் இருக்கிற இடத்தில் நான் இல்லை. நான் இருக்கிற இடத் திற்கு அமைச்சர் அவர்கள் இப்பொழுது வர விரும்பமாட்டார். அமைச்சர் அவர்கள் இந்த அறிக்கையில் என்னென்ன தொழில்கள் தொடங்கப்படும் என்று சொல்லியுள்ள பகுதியில் அந்தத் தொழில் குறிப்பிடப்படவில்லை. எந்தெந்த தொழில்கள் இப்படி நிறைவேற்றப்படாமல் கைவிடப்படும் என்ற ஐயத்திற்கு இடம் இருக்கிறதோ, அவற்றை வற்புறுத்திப் பெறவேண்டும்.

இவை எல்லாவற்றையும்விட, சென்னைமாநகரத்தைப் பொறுத்த வரையில் சென்னை மாநகரத்திற்காகப் பல பெரிய திட்டங்கள் போடப்பட்டு பலகாலமாக அவை நிறைவேற்றப்படாமல் இருக்கிற காரணத்தினால், மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திலாவது அவற்றை நிறைவேற்றுவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் சென்னைமாநகரத்தின் நலன் இப் பொழுது உள்ள நிலைமையைவிடக் கெட்டுப்போகாமல் இருக்கும். வருங்காலத்தில் இதைவிட மக்கள் தொகையும் பெருகி, வசதிகளும் குறையுமானால், உண்மையிலேயே சென்னை நகர மக்கள் நல்வாழ்வு நடத்த முடியாது. அவர்களுடைய வாழ்க்கை பலவிதத்திலும் தொல்லைக்கு ஆளாகும். இத்திட்டத்தில் நான் குறிப்பிட விரும்புவது, சென்னைமாநகரத்திற்கு மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் குடிநீர் வடிகால் திட்டத்திற்கு 5 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. இதில் ஏறத்தாழ 3 கோடி ரூபாய் மத்திய சர்க்கார் உதவித் தொகை என்று தெரிவிக்கப் பட்டிருக்கிறது. சென்னைமா நகரத்தில் எந்த அளவுக்குத் திட்டப்படி குடிநீர் வழங்கவேண்டு

9th November 1961] [Sri K. Anbazhagan]

மென்ற அவசியம் இருக்கிறதோ, அந்தக் குடி நீரை ஒரு இடத்தி லிருந்து இன்னொரு இடத்திற்குக் கொண்டு செல்வதற்கும், வடி கால் திட்டத்திற்கும், டிரைனேஜ் கட்டுவதற்குத் தான் இந்த 5 கோடி ரூபாய்சுடாகும். ஐந்து கோடி ரூபாயில் எந்த ஒரு உயர்தர திட்டமும் மாஸ்டர் பிளானும் செயல்படமுடியாது. ஏற்கனவே 40 ஆண்டுகள், 50 ஆண்டுகளுக்கு முன்பு போடப்பட்ட தண்ணீர் குழாய்கள் மடித்துப் போய் விட்டதால் அந்த இடங் களில் குழாய்களை புதுப்பிப்பதற்கும், சென்னை நகரத்தோடு சேர்ந்த புதிய பகுதிகளுக்கு குடிநீர் வசதி செய்து தருவதற்கும்தான் இந்த ஐந்து கோடி ரூபாய் துணை யாகும். சென்னை நகரக் குடிதண்ணீர் திட்டம் பக்கத்திலுள்ள தண் ணீரைக் கொண்டு வந்து மக்களுக்கு வழங்குவது என்ற கட்டத்தில் இப்பொழுது இல்லை. எனவேதான், காவேரி தண்ணீரைச் சென்னைநகரத்திற்குக் கொண்டுவருவதுபற்றி ஆராய்ச்சி செய்வ தற்காக ஒரு குழு ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. காவேரித் தண்ணீரைக் கொண்டுவரும் திட்டத்திற்கு 15 கோடி, 20 கோடி ரூபாய் அளவு பணம் ஒதுக்கியிருக்கவேண்டும். நிபுணர்கள் இதைப்பற்றி ஆராய்கிறார்கள் என்று மட்டும் சொல்லப்படுகிறது. நகரத்தில் ஏறத்தாழ 17½ லட்சம், 18 லட்சம் மக்கள் இருக்கிறார் கள் என்று புள்ளிவிவரம் தரப்படுகிறது. அவர்களது குடிதண் ணீர் தேவைக்கு காவேரித் தண்ணீரைச் சென்னை நகரத்திற்குக் கொண்டுவருவது மூன்றாவது திட்டத்தில் நிறைவேற்றப்பட்டாக வேண்டும். அதற்கு எந்த அடையாளத் தொகையும் ஒதுக்கப்பட வில்லை. அம்மாதிரி ஒதுக்கப்படாதது வருந்தத்தக்கது. மேலும் சென்னைமாநகரத்திற்கு இப்பொழுது வழங்கப்படுகிற தண்ணீர் ஒரு நாளுக்கு 340 லட்சம் காலன் அளவுதான். பம்பாயில் வழங்கப்படுகிற தண்ணீர் 850 லட்சம் காலன் ஒரு நாளைக்கு. டெல்லியில் ஏறத்தாழ 650 லட்சம் காலன் தண்ணீர் வழங்கப்படு கிறது. இதுபோன்று ஏராளமாக தண்ணீர் வழங்கப்படக்கூடிய பகுதிகளுக்கு மூன்றாவது திட்டத்தில் பெரிய திட்டங்கள் போட்டு குடிதண்ணீர் வழங்குவதற்கு ஒரு பெரிய தொகை ஒதுக்க மத்திய அரசு இசைந்திருப்பதாக டெல்லி நகராட்சி மன்றத்தின் திட்டம் மூலம் அறிகிறேன். அந்த வாய்ப்பு டெல்லி நகராட்சி மன்றத் திற்கு இருக்கிறது என்றால், நம் சென்னைமாநகரத்திற்கும் குடிநீர் கொண்டுவர திட்டம் வேண்டும் என்று ஏன் வற்புறுத்தக் கூடாது? அமைச்சர் அவர்கள் இவற்றைப் பற்றிப் பேசுகிற நேரத்தில் வடக்கு தெற்கு என்று வேற்றுமையே கிடையாது, அம் மாதிரி வேற்றுமைக்கு எள்ளளவும் இடம் தரமாட்டோம், நகரம், கிராமம் என்று கூட பிரித்துப் பார்க்கமாட்டோம் என்று சொன்னாலும்கூட, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒவ்வொரு மாநில அரசாங்கத்திற்கு மட்டும் அல்ல, மற்றும் 'டெரிடரீஸ்' என்று சொல்லப்படுகிற பகுதிகளுக்கும், வழங்கப்பட்டிருக்கிற நிதி உதவி பற்றியும், டெல்லிக்கு எவ்வளவு தொகைக்கு திட்டம் போடப்பட்டிருக்கிறது என்பது பற்றியும் திட்டவெளியீட்டில் படம் போட்டுக் காட்டப்பட்டிருக்கிறது. இதோ அது. டெல்லிக் குக் கோபுர அளவிலும், மற்றப் பகுதிகளுக்குக் குடிசை அளவிலும்

[Sri K. Anbazhagan] [9th November 1961

வழங்கியிருக்கிறார்கள். 82 கோடி ரூபாய் டெல்லிக்கு மட்டும் வழங்கியிருக்கிறார்கள். பாண்டிச்சேரிக்கு 5 கோடி 6 கோடி ரூபாய், மற்ற பகுதிகளுக்கு 4 கோடி ரூபாய் இப்படி வழங்கியிருக்கிறார்கள். எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், தலை நகரத்திற்கு எவ்வளவு நிதி ஒதுக்க அக்கரை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள்

4—0 p.m. டெல்லி சர்க்கார் என்பதை எடுத்துக்காட்டுவதற்குத்தான். அப்படி அவர்கள் ஒதுக்குவது டெல்லியின் வசதியைப் பெருக்கப் பயன் படும். சென்னை நகரத்திற்கு ஒரு ஐந்து அல்லது ஆறு கோடி என்று சொல்லி விடாமல் அதிகமாக ஏற்படுத்தியிருந்தால் நலமாக இருந்திருக்கும். எந்தக் காரணத்தினாலோ அப்படி செய்யவில்லை. சென்னை நகரத்திற்கு ஒரு நக்க குடிதண்ணீர் திட்டத்தைக்கூட நிறைவேற்ற முடியவில்லை.

சென்னை நகரத்தில் கூவம் ஆறு திட்டம் என்று ஒரு போக்கு வரத்துக்கு வசதியான திட்டத்தை இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்னாலேயே நிபுணர்கள் ஆராய்ந்து, அந்தத் திட்டத்தை அரசாங்கத்திற்கு அனுப்பியிருக்கிறார்கள். சென்னை நகரத்தின் நெருக்கடியைத் தவிர்க்க 1¼ அல்லது 1½ கோடி ரூபாய் செலவில் கூவத்தை சுத்தப்படுத்தி, அதற்குக் கரை கட்டி, அதில் கடல் நீரைப் பாய்ச்ச வழி செய்து, அதில் படகுகள் போக்குவரத்தை நடத்தலாம். கூவம் ஆறு துறைமுகத்திற்குப் பக்கத்தில் வருவதால், அதை ஒட்டி கடலில் கலப்பதால், இறக்குமதி பொருள்களை துறைமுக (ஹார்பர்) வட்டாரத்தில் பல்வேறு கிடங்குகள் இருப்பதால்—நெருக்கடி ஏற்படுவதைத் தவிர்க்க பொருள்களை நேரிடையாக நகரத்தின் எல்லைக்குக் கொண்டு போக வசதிகள் செய்ய முடியும். அந்தத் திட்டத்திற்கு மூலதனம் வேண்டும், எங்கே போவது என்று கேட்கலாம். மத்திய சர்க்கார், மாநில சர்க்காருக்குச் சொந்தமாக இருக்கும் கடற்கரை நிலத்தை ஹார்பருக்கு இடவசதிக்காக எடுத்திருக்கிறார்கள். 1½ கோடி ரூபாய் அளவுக்கு மாநில சர்க்காருக்கு ஈட்டுத்தொகை தருகிறார்கள், அந்த நிதியைப் பயன்படுத்தினால், கூவத்தைப் பயன்படுத்த முடியும், அந்தத் திட்டத்தை நிறைவேற்ற முடியும் என்று தெரிவிக்கிறேன். கூவத்தைப் பயன்படுத்தி, கரை கட்டி, கரைக்குப் பக்கத்தில் பல கோடவுன்கள் அமைக்க வழிசெய்து, வணிகர்கள் பொருள்களை கரைக்குப் பக்கத்தில் சேர்த்துவைத்து ஹார்பர் பகுதியிலிருந்து, வெளிப் பகுதிகளுக்குக் கொண்டு போகும் அளவுக்கு நகர நெருக்கடியைக் குறைக்க இந்தத் திட்டம் துணையாக இருக்கும். அந்தத் திட்டம் எந்தக் காரணத்தினாலோ கைவிடப் பட்டிருக்கிறது. அமைச்சரவர்கள் மத்திய சர்க்காரிடம் வற்புறுத்தி, திட்டத்தை நிறைவேற்றுவதற்கான வழிவகை காணவில்லை என்று வருத்தத்துடன் தெரிவிக்கிறேன். பல திட்டங்களைப் பற்றி இந்தக் குறிப்பில் இல்லை. அமைச்சரைக் கேட்டால், எப்பொழுது அத் திட்டங்களுக்குத் தேவை ஏற்படுகிறதோ, அப்பொழுது கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம் என்று தெரிவிக்கிறார்கள். அது போதாது,

9th November 1961] [Sri K. Anbazhagan]

அந்த உரிமையை முன்னாலேயே பெறவேண்டும். அதை நிறைவேற்றுவதற்கு நிதி துண்டு விழுந்தால், அப்பொழுது அதற்கு உதவி பெறலாம். புதிய பல திட்டங்களுக்குத் தேவை என்றால், அடுத்த ஐந்தாண்டு தள்ளிப் போடக் கூடிய நிலைமைதான் ஏற்படும்.

காவேரியிலிருந்து கால்வாய் வெட்டி புதுக்கோட்டைப் பகுதிக்கு நீர் பாய்ச்ச வேண்டும் என்று சட்ட மன்றத்திலே பல தடவைகள் தெரிவித்தார்கள். ஏதோ காரணத்தினால் அது ஏற்கப் படவில்லை. அதேபோல, மேட்டூர் அணையை உயர்த்த வேண்டும். காவேரிக்குக் கரை உயர்த்த வேண்டும்; கொள்ளிடத்தை ஆழப் படுத்த வேண்டும்; பாலாற்றுக்கு நீர் கொண்டு வரவேண்டும். அம்மாதிரியான திட்டங்கள்பற்றி குறிப்பில் ஒன்றும் இல்லை. அவைகளை நிறைவேற்ற முயற்சிகள் எடுக்க வேண்டும்.

மற்றும் மின்சார உற்பத்தியைப் பெருக்கவும், சென்னை நகரத்தில் நடத்தப்படும் தொழில்களுக்குத் துணையாகவும் ஒரு மின்சார நிலையம் ஏற்படுத்த வேண்டும். சென்னை வடிகால் நீரை ஒரு இடத்தில் தேக்கி, அதைச் சுத்தப்படுத்தும் முறையில் ஒரு நிலையம் ஏற்படுத்தி, அதன் மூலம் எரிவாயுவைப் உற்பத்தி செய்ய முடியும். அப்படிக் கிடைக்கும் எரிவாயுவைப் பயன்படுத்தியே தொழிற்சாலைகள் நடத்தலாம் அந்த எரிவாயு மூலம் மின்சாரத் திற்கு வழிசெய்யலாம். "காஸ் டர்பைன்" முறை மூலமாக எரிவாயுவை உற்பத்தி செய்து, மின்சார உற்பத்தி செய்ய முடியும் வாயுவை உற்பத்தி செய்து, மின்சார உற்பத்தி செய்ய முடியும் என்று தெரிவிக்கிறேன். அப்படி சென்னை நகரத்திலுள்ள "ஸூவேஜ் வாட்டரை"க் கொண்டு மின்சார உற்பத்திக்குத் தேவையான ஒரு எரிவாயு நிலையத்தை ஏற்படுத்துவதானால் அதற்குப் பெரும் மூலதனம் தேவை ஆகிவிடாது, சில கோடிகள் தான் வேண்டும், இதனால் சென்னை நகர மின்சாரத் தேவையை யாவது நிறைவேற்றலாம். இந்த ஸூவேஜ் வாட்டர் கூவத்தில் கலப்பதால் ஏற்படும் தீமையும் கெடுதலும் ஒழியும். தண்ணீர் வடிகட்டுவதனால் கிடைக்கும் வண்டலும் எருவாகப் பயன் படும்; தண்ணீரும் பாசனத்திற்குக் கிடைக்கும். குடிதண்ணீராகக் கொடுக்கும் அளவுக்குக்கூட தூய்மைப்படுத்த முடியும் என்று சொல்லுகிறார்கள். அப்படிப்பட்ட தண்ணீரை அருந்த பொது மக்கள் அருவெறுப்பு அடைவார்கள் என்று சொன்னாலும், அவர் கள் உள்ளம் இடம் தராது என்று சொன்னாலும், அதைப் பாசனத் திற்குப் பயன் படுத்தலாம். அந்தத் திட்டம் என்ன காரணத் தினாலோ இதில் இடம் பெறவில்லை. அவ்வாறு விட்டுவிட்ட திட்டங்களைச் சேர்த்துப் பொதுமக்களுக்குப் பயன் அளிக்கும் திட்டங்களையும் சேர்த்துப் பார்த்தால், எந்த அளவுக்குத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது, அந்தத் தொகை போதாது. அதனை இரட்டிப்பு மடங்கு ஆக ஆக்க முழு முயற்சி எடுக்க வேண்டும். தமிழ் நாட்டிலே உள்ள வருமானக் குறைவை நீக்கி, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க, இந்தத் திட்டத்தின் அளவை உயர்த்துவது மூலமாக முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும்.

[Sri K. Anbazhagan] [9th November 1961

இந்தத் திட்டத்திலே எங்களுக்கு வெறுப்பு இல்லை. ஆனால், அதை நிறைவேற்றும் முறைகளிலே, ஏற்படும் குறைகளை அதில் காட்டப்படும் ஓரவஞ்சனைகளை, ஊழல்களைக் களைய வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். வட நாட்டில் இரும்புத் தொழிற் சாலையில் ஏற்பட்டது ஊழல், சிந்திரியில் ஏற்பட்டது ஊழல், பக்ராவில் ஏற்பட்ட ஊழல் வளர்ந்து அது அணை வெடிக்கும் அளவுக்குப் போயிற்று—அவற்றிலும் நம் வரிப் பணமும் போய்ச் சேர்ந்திருக்கிறது என்ற உணர்ச்சியால், அந்தமாதிரியான குறை களை ஊழல்களை நீக்க வேண்டும் என்று கேட்கிறோம். அமைச்சர வர்கள் குறைகள் இருப்பது இயற்கைதான் என்று சொல்லி விட்டால் போதாது. குறைகளைப் போக்க வேண்டும். நிதி யமைச்சரவர்கள் இங்கே இருந்து குறைகளைப் போக்க முடியாது, அங்கேயே போய் நீக்கலாம் என்று போகப்போகிறார் போலும் என்றெண்ணுகிறேன். எங்கே போனாலும், உள்ள குறைகளை நீக்காவிடில் பயனில்லை என்று அவர்களுக்குச் சொல்லிக்கொண்டு, இந்தத் திட்டத்திற்கு நாங்கள் கொடுத்திருக்கும் பல திருத்தங் களையும் எண்ணிப் பார்த்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று வேண்டிக்கொண்டு, என் உரையை முடிக்கிறேன். வணக்கம்.

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், மூன்றாவது ஐந் தாண்டுத் திட்டம் நமக்கு முன்னால் விவாதத்திற்கு வந்திருக்கும் இந்த நேரத்திலே, மதிப்பிற்குரிய அமைச்சரவர்கள் பல விஷயங் களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அது அகில இந்திய ரீதியில் ஆரம்பித்து, சர்வ தேச ரீதியில் சென்று இன்றைக்கு நாம் எந்த அளவுக்கு ஜனநாயகத்தை நாம் அனுஷ்டிக்கிறோம், என்ன வேண்டு மானாலும் பேசக்கூடிய பரிபூரண சுதந்திரம் கொடுத்திருக்கிறோம் என்று குறிப்பிட்டார்கள். எந்த அளவுக்கு முதல் ஆண்டுத் திட்டம் இருந்தது, இரண்டாவது திட்டம் இருந்தது, இப்பொழுது எந்த அளவுக்கு மூன்றாவது திட்டம் நிறைவேற்றப்பட இருக்கிறது என்று சொல்லி, இந்த ஆண்டு முதல் ஆண்டாக ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இப்படி ஆரம்பிக்கப்பட்டிருக்கும் நேரத்தில், இந்தத் திட்டங்கள் வெற்றிகரமாக நிறைவேற்றப்பட வேண்டுமானால், கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பெரிய அளவுக்கு உதவி செய்திருக் கிறார்கள் என்பதை அமைச்சரோ அல்லது சர்க்காரோ மறுக்க முடியாது. ஆனால் அதே நேரத்தில், இன்றைக்கு திட்டத்திற்கு ஒதுக்கும் தொகை எவ்வளவு, 100 கோடியா, 200 கோடியா, 300 கோடியா அல்லது 500 கோடியா என்பதல்ல பிரச்சினை. நீட்ட லாம் திட்டத்தை. ஆனால், திட்டத்தைப் போடுவது பெரிதல்ல. அதைத் திறமையாக, நேர்மையாக நிறைவேற்ற வேண்டும் என்பதில்தான் எல்லாம் இருக்கிறது என்பதை யாரும் உணருவார்கள். அப்படிச் சொல்லக்கூடிய நேரத்திலே, இந்த இரண்டு திட்டங்களிலே என்ன குறைபாடு களைக் கண்டீர்கள், சொல்லியிருக்கிறீர்கள் என்று கேட்கலாம். குறிப்பாகச் சொல்லவேண்டுமானால், இந்த இரண்டு திட்டங்களை நிறைவேற்றிய பிறகு, இன்றைக்கு மூன்றா வது திட்டத்திலே, விவசாய அபிவிருத்தி ஏற்படவேண்டும்,

9th November 1961] [Sri V. K. Kothandaraman]

உணவு உற்பத்தி பெருக வேண்டும், குடும்பக் கட்டுப்பாட்டை நல்ல முறையிலே கொண்டு வரவேண்டும் என்பவைதான் பிரதானமாக இருக்கிறது. தொழில் வளர்ச்சி ஏற்படவேண்டும், பொருள் வசதிகள் ஏற்படவேண்டும் என்று அந்தத் துறையில் கவனிக்கப் படுகிறது. அப்படிச் சொல்லித் திட்டம் தீட்டி விட்டால் போதுமா ? குறிப்பாக மற்ற நாடுகள் எந்த அளவுக்கு முன்னேறிக்கொண்டு போகின்றன என்று பார்க்கும்போது, நாம் பழைய உழவு மாட்டை வைத்துக் கொண்டு, பழைய கலப்பையை வைத்துக் கொண்டு பெரிய அளவில் முன்னேற முடியுமா ? நவீனக் கருவிகளை உபயோகிக்க வேண்டும். விவசாயிகளுக்கு வேண்டிய பொருள்களை அத்தியாவசியமான பொருள்களைக் கொடுப்பது மட்டுமல்லாமல், அவை குறைந்த விலையில் கொடுக்கவும் ஏற்பாடுகள் செய்தாகவேண்டும். சர்க்காருடைய கொள்கை இந்த விஷயத்தில் மிகவும் பிற்பட்ட கொள்கையாக இருக்கிறது. விவசாய அபிவிருத்திக்கு, உணவு உற்பத்திக்கு, தொழில் வளர்ச்சிக்கு வேண்டிய மூலப் பொருள்கள் எந்த அளவில் உற்பத்தி செய்யப் படுகின்றன அதற்காக என்ன திட்டங்கள் என்று பார்க்க வேண்டியிருக்கிறது. அது மாத்திரம் அல்ல, நாங்கள் திட்டங்களை நிறைவேற்றி விட்டோம், உற்பத்தியைப் பெருக்கி விட்டோம், அதிகப்படுத்தி விட்டோம் என்று சொல்லி விட்டால் மட்டும் போதாது. உற்பத்தி அதிகமாக அதிகமாக விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகிறது. அப்படி உயர்ந்து கொண்டு போகலாமா ? விலைவாசிகள் வருடத்திற்கு வருடம் மாதத்திற்கு மாதம் உயர்ந்து கொண்டே போகிறது. அதைக் கட்டுப்படுத்த என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. அதற்குக் காரணம் என்ன ? பல தொழில்கள் தனியார் துறையில் இருப்பதால்தான் விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகிறது. ஒரு சிலருடைய கையில் இருப்பதால் பெரிய அளவிற்குப் பொருள் அங்கே குவிந்திருப்பதால் அவர்கள் கொள்ளை லாபம் அடிக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருப்பதால் விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போகிறது. அவர்கள் விற்பனையைக் கட்டுப்படுத்துவதாலும் கொள்ளை லாபம் அடிப்பதாலும்தான் இப்படி விலைவாசிகள் அதிகமாகிக் கொண்டு வருகிறது. அதைக் கட்டுப்படுத்த நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதனால்தான் 11,600 கோடி ரூபாய்க்குத் திட்டம் போட்டாலும்கூட அந்த அளவில் நிறைவேற்றக்கூடியதாக இருக்கிறது. அதனால்தான் வருஷம் ஒன்றுக்கு 1½ மடங்கு உயர்ந்து கொண்டே போகிறது. இப்படித் தனியார் துறையில் அதிகப்படியான தொழிற்சாலைகள் இருப்பதால்தான் திட்டமே உருக்குலையக் கூடிய அளவில் அவர்கள் விலைவாசிகளை உயர்த்தி வருகிறார்கள். அதனால் இன்றைக்கு விலைவாசிகளை கட்டுப்படுத்த வேண்டும். வாழ்க்கைக்கு அத்யாவசியமாக உள்ள பொருள்களின் விலையைக் கட்டுப்படுத்த வேண்டும். இன்றைய நிலைமையில் விலைவாசிகள் எப்படி இருக்கிறது என்றால் குறைகூறக்கூடிய அளவில் நிலைமை இருக்கிறது. இதற்கு முன்னதாக கனம் அமைச்சர் அவர்கள் விலைவாசியைப்பற்றிப் பேசும்போது விலைவாசியின் உயர்வால் அதிகச் சம்பளம் வேண்டும் என்று கேட்கிறார்கள் என்றும் அதிகச்

[Sri V. K. Kothandaraman] [9th November 1961

சம்பளம் கொடுத்தால் விலைவாசிகள் அதிகமாக ஆகிறது என்றும் இப்படி ஒன்றுக்கு ஒன்று போட்டி போட்டுக் கொண்டிருக்கிறது என்றும் சொன்னார். இப்படிச் சொல்லிக்கொண்டு வந்தவர் சென்ற பட்ஜெட் விவாத நேரத்தில் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று சொன்னார். அதே மாதிரிதான் பார்லிமெண்டிலும் விலைவாசிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்றும் சொன்னார்கள். அதே மாதிரி தான் திருச்சியில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில்கூட இது சம்பந்தமாக ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. அப்படி கமிட்டி அமைக்கக்கூடிய நிலைமைகூட ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இப்படிக் கமிட்டிகளை அமைத்து விட்டால் மட்டும் போதாது. அதே நேரத்தில் சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க வேண்டும் என்று சொல்லப்பட்டது. அதன் மூலம் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்று சொல்லக்கூடிய நேரத்தில் இந்த நாட்டில் சோஷலிசம் உதவுமா என்று சந்தேகம் வந்தது. இந்த நாட்டிற்கு சோஷலிசமும் கம்யூனிஸமும் உதவாது என்று முடிவு செய்யப்பட்டது. ஆனால் சோஷலிச சமுதாயத்தைக் கொண்டு வருவதற்காக ஆவடி காங்கிரஸ் கூட்டத்தில் இதைப்பற்றித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு அதன் மூலமாவது மக்களிடத்தில் சோஷலிச சமுதாயத்தைப் பரப்புவதற்கு முயற்சிக்கப்பட்டது. அந்த அளவிலாவது அவர்களிடம் சோஷலிச மனப்பான்மை உண்டாகட்டும் என்ற அடிப்படையில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

ஆனால் இன்றைய தினம் என்ன பார்க்கிறோம் என்றால் வேலையில்லாத் திண்டாட்டம்தான் அதிகமாகி இருக்கிறது. எந்த அளவுக்கு நாம் திட்டங்களை நிறைவேற்றி வருகிறோமோ அந்த அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டமும் அதிகரித்துக்கொண்டே தான் வருகிறது. இரண்டாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்ப காலத்தில் சர்க்கார் புள்ளி விவரப்படி 53 லட்சம் பேர்களுக்கு வேலை இல்லாமல் இருந்திருக்கிறது. அதே போன்று மூன்றாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்ப காலத்தில் 93 லட்சம் பேர்களுக்கு வேலை இல்லாமல் இருக்கிறது. அரைகுறை வேலையிலுள்ளவர்கள் 150 முதல் 200 லட்சம் பேர்கள். இது போல் புள்ளி விவரம் சர்க்காருடையதுதான். இந்த நிலைமையில் வேலையில்லாத் திண்டாட்டம் இருப்பதற்குக் காரணம் என்ன?

விவசாயத் துறையில் விவசாயி நிலச்சுவான்தார்களுடைய உறவு சரியாக இல்லாமல் இருப்பதோடல்லாமல் தொழில் துறையில்கூட முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் உறவு சரியாக இல்லை. அதுவும் தனியார் துறையில் இது பெரிய அளவிற்கு இருந்து வருகிறது. இன்றைக்கு நாங்கள் கம்யூனிஸ்ட் நாடு என்று சொல்லுகிறோம். தனியார் துறையில் எந்த அளவுக்கு வேலையில்லாத் திண்டாட்டம் இருக்கிறதோ அந்த அளவுக்கு சர்க்கார் துறையில் இருக்க முடியாது. அந்த முறையில் தனியார் துறையில் அதிகப்படியான தொழில்கள் இருப்பது அவசியம் இல்லை. இன்றைக்குப் பார்த்தால் குறிப்பாக கோச் பாக்டரியும், நெய்வேலி

9th November 1961] [Sri V. K. Kothandaraman]

திட்டமும் சர்க்காருடைய கையில் இருக்கிறது. ராஜ்ய சர்க்கார் எடுத்து நடத்தி வருவது இங்கே இருக்கக்கூடிய பஸ் ட்ரான்ஸ் போர்ட் தான். அது தவிர வேறு கிடையாது. ஆனால் சர்க்கார் சொல்லலாம், சர்க்கார் எடுத்து நடத்தினால் பத்துத் தொழிற் சாலைகளை எடுத்து நடத்தலாம், அப்பொழுது பத்தாயிரம் பேர் களுக்கு வேலை கொடுக்கலாம், ஆனால் தனியார் துறையில் எடுத்து நடத்தினால் அவர்கள் 100 தொழிற்சாலைகளை ஆரம்பிக்கலாம், தனி யார் தனிப்பட்ட முறையில் மூலதனம் போடுகிறார்கள் அதனால் எவ்வளவு பேர்களுக்கு வேலை கிடைக்கும் என்று சொல்லலாம். இப்படி ஐந்து வருஷங்களாகக் கூறிக்கொண்டே வருகிறார்கள். ஆனால் வேலை இல்லாத் திண்டாட்டம்தான் அதிகமாகிக்கொண்டு வருகிறது. இதை நான் சர்க்காருடைய புள்ளி விவரங்களி லிருந்தே எடுத்துக்காட்ட முடியும். அதற்குக் காரணம் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். இந்த நாட்டில் 200 வருஷ காலமாக அந்நிய ஆட்சி இருந்த காலம் முதற்கொண்டு அந்நியர் இங்கிருந்து சுரண்டிக் கொண்டே போனான் என்று சொல்லப்படுகிறது. அன்று வெள்ளையன் இங்கிருந்து சுரண்டிக் கொண்டு போனான், ஆனால் இன்றைய தினம் இங்குள்ள முதலாளிகளே சுரண்டிக் கொண்டிருக்கிறார்கள். சுரண்டுதல் பெரிய அளவில் உயர்ந்து கொண்டேதான் போய்க் கொண்டிருக்கிறது. இந்த நாட்டில் தனியார் துறையில் தொழில்கள் இருப்பதால்தான் முதலாளிகள் சரியாக அவைகளை நடத்து வில்லை. திடீர் திடீர் என்று தொழிற்சாலைகளை மூடிவிடுகிறார்கள். முதலாளி தொழிலாளி உறவு சரியாக இல்லை. சில தொழில்களை சர்க்காருக்குக் காண்பித்துப் பணத்தை வாங்கி அதை அபிவிருத்தி செய்யாமல் தொழிற்சாலைகளை மூடிவிடுகிறார்கள். ஆகவே அவர்கள் தொழில்களை சரியாக நடத்துகிறார்களா என்று பார்க்க வேண்டும். சரியானபடி தொழிற்சாலைகள் நடந்தப் படாததால்தான் இன்றையதினம் அவற்றை சர்க்காரே எடுத்து நடத்த வேண்டும் என்று சொல்லுகிறோம். அப்படி நடத்தக்கூடிய நிலைமையில் இல்லாதபோது தேர்தல் காலத்தில் மூன்றாவது திட்டத்தைக் காட்டி வெற்றி பெறப் போகிறார்கள். இதைத்தான் சுதந்தரா கட்சி எதிர்க்கிறது. இதைக் காட்டி மக்களிடத்தில் வோட்டு வாங்கலாம் என்று எதிர் பார்க்கிறது. இதற்கு 1,650 கோடி ரூபாய் புதிய வரி மூலமாக வசூல் செய்யப் போகிறார்கள். அந்த அளவுக்கு விலைவாசிகள் உயரப்போகிறது. அதற்கு என்று மேலும் புதிய வரிகளைப் போடப் போகிறார்கள். இதுதான் இரண் டாவது திட்ட காலத்திலும் நடந்தது. இப்பொழுது இதைக் காட்டி விட்டு பிறகு துணிச்சலாக அதிகப்படியான வரி போட்டு வசூலிக்கப் போகிறார்கள். ஆகவே தேர்தலுக்குப் போன பிறகு பார்க்கலாம். இன்றையதினம் 60 கோடி ரூபாய் ஏழை மக்க ளுடைய பொருள்களின் மீது வரி விதிக்கப் போகிறார்கள். தேர்தலுக்குப் பிறகு புதிய புதிய ரூபத்தில் வரிகள் வரப்போகிறது. இப்பொழுது குடும்பக் கட்டுப்பாட்டைக் கொண்டு வருகிறார்கள். ஒருவருக்கு இரண்டு மூன்று குழந்தைகளுக்குமேல் இருக்கக் கூடாது என்று சொல்லி வருகிறார்கள். மூன்றாவது திட்ட காலத் திற்குப் பிறகு இந்த அளவுக்கு மேல் பிள்ளைகள் இருந்தால் ஒரு

[Sri V. K. Kothandaraman] [9th November 1961

குழந்தைக்குப் பத்து ரூபாய் என்றும், இரண்டு குழந்தைகள் இருந்தால் பதினைந்து ரூபாய் என்றும் வரி விதிக்கக்கூடிய அளவில் வரலாம். ஆகவே எந்த வகையிலாவது வரி போடக்கூடிய அளவுக்கு பயம் இருக்கிறது. ஆகவே இன்றைக்கு இந்தப் பணத்தைச் சம்பாதிக்க சர்க்கார் ஏன் பஸ் லாரி போன்ற ட்ரான்ஸ் போர்ட்களை சர்க்காரே எடுத்து நடத்தக் கூடாது? அது போன்று இன்னும் சில கனரக இயந்திரத் தொழிற்சாலைகளை சர்க்காரே ஏன் எடுத்து நடத்தக் கூடாது? அப்படி எடுத்து நடத்தாமல் இருப்பதால்தான் திட்டம் தீட்டும்போது சோவியத் ரஷ்யா போன்ற திட்டங்களை நிறைவேற்றுகிறார்கள் என்று திரு. ராஜ கோபாலாசாரியார் போன்றவர்கள் சொல்லி வருகிறார்கள். அதனால்தான் கம்யூனிஸ பாதையில் போகிறார்கள் என்று சொல்லு கிறார்கள். அந்த அளவில்தான் இன்றைக்கு சுதந்தரா கட்சி பிரசாரம் செய்துகொண்டு வருகிறது.

**THE HON. SRI P. KAKKAN :** அதனால்தான் அந்தக் கட்சி யுடன் உறவாடிக்கொண்டு வருகிறீர்களா?

**SRI V. K. KOTHANDARAMAN :** அந்தக் கட்சியுடனும் சரி வேறு எந்தக் கட்சியுடனும் சரி உறவாடிக்கொண்டு நாங்கள் வர வில்லை. இதுபற்றி தேர்தலுக்குப் பிறகு தெரியும். யார் யாருடன் உறவாடிக் கொண்டு வருகிறார்கள் என்பது. அது இப்பொழுதே எங்களுக்குத் தெரியும். ஆனால் அதைப்பற்றி பின்னடி—தேர் தலுக்குப் பிறகு சொல்லுகிறோம். அதையேதான் நாங்கள் சொல்லிக்கொண்டு வருகிறோம்.

**THE HON. SRI P. KAKKAN :** நேரடியாக உறவாடாவிட்டாலும் வேறு விதமாக உறவாடிக்கொண்டுதான் வருகிறீர்கள்.

**SRI V. K. KOTHANDARAMAN :** தேர்தல் வரட்டும் சொல்லு கிறோம். ஒரு வருடத்திற்கு முன்னதாக கம்யூனிஸ்ட் கட்சி பலமாக இருக்கிறது, அதை கவிழ்க்க வேண்டும் என்பதற்காக எந்த அளவுக்கு ஜவஹர்லால் அவர்களும் காங்கிரஸ் கட்சி ப்ரசி டெண்ட் சஞ்சீவ ரெட்டி அவர்களும் மற்றும் பெரியவர்கள் முதற் கொண்டு பிற்போக்கு சக்திகளுடன் எவ்வளவு உறவாடினார்கள் என்பது தெரியும். பிற்போக்கு சக்திகளுடன் சேரக் கூடாது என்று சொன்னவர்கள் எப்படி உறவாடினார்கள் என்பதை மறைப் பதற்கு வேண்டுமானால் சொல்லலாம். ஆகவேதான், இன்றைய தினம் யார் யாருடன் சேரப் போகின்றார்கள், எப்படி நடைபெறப் போகின்றது என்பதை நாம் நன்றாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். நமது தமிழ்நாட்டில் தொழில்கள் வளருவதற்கான வாய்ப்புகள் எவ்வளவோ இருக் கின்றன. காகிதத் தொழிற்சாலை, பிலிம் தொழிற்சாலை, மாக்ன ஸைட் தொழிற்சாலை, சிமெண்ட் தொழிற்சாலை போன்றவைகளை யெல்லாம் தனியார்கள் கையில் கொடுப்பதன் மூலமாகத் திட்டம் நிறைவேற முடியாத நிலைமையில் இருக்கிறது.

கிராமப் புறங்களில் பஞ்சாயத்து யூனியன்களுக்குப் பரிபூரண அதிகாரம் கொடுத்துவிட்டோம் என்று சர்க்கார் சொல்லுகிறார்கள் என்றாலும், அங்கே கிணறு வெட்டவேண்டுமென்றால் சிமெண்ட்

9th November 1961] [Sri V. K. Kothandaraman]

கிடைக்கவில்லை, கட்டிடம் கட்ட வேண்டுமென்றால் இரும்பு கிடைக்கவில்லை என்று சொல்லக்கூடிய நிலைமை இருக்கிறது. ப்ளாக் மார்க்கெட்டில் வாங்கி வேலை செய்யக்கூடிய அளவு பல இடங்களில் நிலைமை இருந்து வருகிறது என்பதை நாம் பார்க்கிறோம். சிமெண்ட் தொழிற்சாலை, இரும்புத் தொழிற்சாலை முதலியவைகள் சர்க்கார் கையில் இருக்குமேயானால், இதுபோன்று திட்டமே நிறைவேற முடியாத நிலைமை ஏற்பட முடியுமா என்பதைத்தான் நான் கேட்க விரும்புகிறேன்.

திட்டத்தைப் பரிபூரணமாக நிறைவேற்றுவதற்கு ஆலோசனை கூறவேண்டுமென்று சொல்லிவிட்டு, அதே நேரத்தில் திட்டத்தைச் சீர்குலைப்பதற்கு முயற்சி செய்யக்கூடிய அளவுக்கு, மேலுக்கு காங்கிரஸ் என்று சொல்லிக் கொண்டு உள்ளுக்கு சுதந்திரா கட்சியுடன் உறவாடக்கூடிய அளவுக்குப் பல தொழிற்சாலைகளை நடத்தக்கூடிய நபர்கள் இருக்கிறார்கள் என்றால், அவர்களைத் தாஜா செய்யக்கூடிய முறையிலே சர்க்காருடைய போக்கு இருக்கிறது. இதை மூடி மறைத்துக்கொள்வதற்கு என்ன வேண்டுமானாலும் பதில் சொல்லப்படுகிறது. திட்டமே வேண்டாம் என்று சொன்னவர்கள் சுதந்திராக் கட்சியைச் சேர்ந்தவர்கள். தனியார் துறையில்தான் இருக்கவேண்டும். பொதுத் துறையிலே தொழில்கள் இருக்கக்கூடாது என்று சொல்லக்கூடியவர்கள்தான் பகிரங்கமாகச் சொல்கிறார்கள். நமது சர்க்கார் நாசூக்காகப் படிப்படியாக முன்னேறுகிறோம். படிப்படியாக இரண்டையும் வளர்த்துக் கொண்டு போகிறோம் என்று சொல்கிறார்கள். இந்த ராஜ்ய சர்க்கார் எத்தனை தொழிற்சாலைகளை நடத்துகிறது என்று நான் கேட்கிறேன். கொஞ்சம் மூலதனம் போட்டிருக்கலாம். தனியார்களுக்கு மட்டும் பணம் எங்கிருந்து வருகிறது? அமெரிக்காவிடத்திலிருந்தோ, மேற்கு ஜெர்மனியிடத்திலிருந்தோ தனியார்களுக்குப் பணம் வருகிறதேயொழிய, அதே பணம் இந்தச் சர்க்கார் தொழில் நடத்தலாம் என்றால், அதற்குக் கொடுக்க முடியாது என்று சொல்கிறார்கள். நாங்கள் என்ன செய்வது என்று சர்க்கார் பதில் சொல்லக்கூடிய நிலைமை இருக்கிறது. இந்தச் சர்க்கார் பேரில் அவர்களுக்கு மதிப்பு இல்லை; நம்பிக்கை கிடையாது. ஆனால், இந்தியாவிலே தனியார்கள் நடத்தினால் எவ்வளவு கடன் வேண்டுமானாலும் கொடுப்போம் என்று சொல்லும் நிலைமை இருக்குமானால், இதற்கு ஆதரவு கொடுக்கும் அளவுக்கு சர்க்கார் இருக்குமானால், திட்டம் எந்த அளவுக்கு நிறைவேறும் என்பதைத்தான் இந்த நேரத்தில் நான் சுட்டிக் காட்ட ஆசைப்படுகிறேனே தவிர, மற்றப்படி ஏதோ சர்க்காரைக் குறை கூறி, மக்கள் மத்தியிலே சொல்லி வோட்டு வாங்கி மந்திரியாக உட்கார்ந்துவிடவேண்டும் என்பதற்காக அல்ல. இன்றைக்கு மந்திரியாக இருப்பவர்கள் நாளைக்கு ஒன்றுமே இல்லாமல் இருப்பதையும் நேருக்கு நேராக நாம் பார்க்கிறோம். இன்றைக்கு எம்.எல்.ஏ-வாக இருப்பவர் நாளைக்குச் சாதாரண மனிதராக வந்துவிடுகிறார். இதையும் பார்க்கிறோம். ஆகவே, திட்டத்தைப் பரிபூரணமாக நிறைவேற்ற வேண்டுமானால், நேர்மையான பார்வையில் பார்ப்பதன் மூலமாகத்தான் நாம் நல்ல முறையில் நிறை

[Sri V. K. Kothandaraman] [9th November 1961

வேற்ற முடியுமே அல்லாமல், நாம் விவசாய அபிவிருத்தி, உணவு உற்பத்தி, தொழில் அபிவிருத்தி என்று சொன்னால் மட்டும் போதாது. அதற்காகப் பணியாற்றுவதற்கு வழி காணவேண்டும். எதற்கெடுத்தாலும் மக்கள் பேரிலே மறைமுகமான வரி போடக் கூடாது. முதல் ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் எந்த அளவு நேரடி வரியைவிட மறைமுக வரி அதிகப்படுத்தக்கூடிய அளவுக்கு நிலைமை வளர்ந்து வந்திருக் கிறது என்பதைப் பார்க்கிறோம்.

**Sri R. KRISHNASAMI NAIDU** : ஒவ்வொரு 'ஐடம்' மாகச் சொல்லுங்கள்.

**Sri V. K. KOTHANDARAMAN** : ஒரு 'ஐடம்' என்ன, ஆயிரம் ஐடம்கள் சொல்லத் தயார்.

**Sri R. KRISHNASAMI NAIDU** : ஒன்று சொல்லுங்கள்.

**Sri V. K. KOTHANDARAMAN** : இந்த நாடு 1947-ம் வருஷத் தில் சுதந்திரம் அடைந்த முதல் வருஷத்திலிருந்தே தனியார் துறையில் பல தொழிற்சாலைகள் நடந்துவருகின்றன. பல தொழிற்சாலைகளை வைத்துக் கொண்டிருக்கக்கூடிய டாடா ஸ்டீல் தொழிற்சாலையில் 4 கோடி 6 லட்ச ரூபாய் லாபம் வந்திருக்கிறது. 1960-ம் வருஷத்தில் 14 கோடி ரூபாய் லாபம் வந்திருக்கிறது. அப் பேர்ப்பட்ட பிரபுவுக்கு 10 கோடி ரூபாய், தம்பிடி வட்டி இல்லாமல் அரசாங்கம் கடன் கொடுத்திருக்கிறது. சாதாரண விவசாயி பம்ப் செட் வாங்கவேண்டும், கிணறு வெட்டவேண்டும், அல்லது விவசாய அபிவிருத்தி செய்யவேண்டுமென்று கடன் கேட்டால் அதற்குப் பல முறை சுற்றி அலையக்கூடிய நிலைமை இருக்கிறது. கடன் வாங்கிவிட்டாலும், அதைத் திருப்பிக் கட்ட முடியாவிட்டால், ஆடு, மாடு முதற்கொண்டு ஆஸ்தி எல்லாவற்றையும் ஜப்தி செய்து வசூல் செய்யக்கூடிய நிலைமை இருக்கிறது. அதுபோன்றுதான் சிறிய வியாபாரியின் நிலைமையும். பெரிய முதலாளிகள் ரொம்ப இலே சாக, சாதாரணமாகப் பெறக்கூடிய நிலைமை இருக்கிறது, 300 கோடி ரூபாய் வரையில் அவர்கள் வருமான வரி மத்திய சர்க்காருக்குச் செலுத்த வேண்டியிருக்கிறது, அதை எப்படி யாவது கொடுத்துவிடுங்கள் என்று கெஞ்சிக் கூத்தாடும் நிலைமை இருக்கிறது. பார்லிமெண்டில் என்ன நடக்கிறது என்று நாம் கொஞ்சம் படிக்கவேண்டும். அப்பொழுதுதான், ஒரு ஐடம் அல்ல எத்தனை ஐடம் வேண்டுமானாலும் தெரிந்துகொள்ளக்கூடிய நிலைமை ஏற்படும்.

உணவு உற்பத்திப் பெருக்கத்தை ஏற்படுத்தவேண்டுமானால் விவசாய உறவு முறை சரியாக இருந்தாகவேண்டும். அப்படி யில்லாமல், நாங்கள் என்ன வேண்டுமானாலும் பேச உரிமை கொடுத்துவிட்டோம், சுண்ணாம்பையும் வெண்ணெயையும் ஒன்றாகப் பார்க்கக்கூடாது என்று சொல்வதில் பிரயோஜனம் இல்லை. சுண்ணாம்பைக் காட்டி வெண்ணெய் என்று சொல்லக்கூடிய நபர்களும் இருக்கிறார்கள். சுண்ணாம்பை வெண்ணெய் என்று சொல்லக்கூடிய நபர்கள் யார் என்று தீர்ப்பு சொல்லக்கூடியவர்கள்

9th November 1961] [Sri V. K. Kothandaraman]

மக்கள்தான். இன்றைக்குள்ள நிலைமையில் மெஜாரிடியாக வந்து விட்டோம் என்று ஏதோ பிரமாதமாக இருந்துவிட்டால் போதாது. நாளாவட்டத்தில் காலம் நிர்ணயிக்கும். அது நமக்குத் தெரியும். பக்கத்திலே எடுத்துக்காட்டாக இருப்பது தெரிந்த விஷயம். அதை மறந்துவிடக்கூடாது. ஆகவேதான் இன்றைக்கு இருக்கும் இந்த நிலைமையில் விவசாய உறவு முறைகளை நல்ல முறையிலே ஏற்படுத்தவேண்டும். புதிய வரிகளைக் கண் மூடித் தனமாகப் போடக் கூடாது என்பதை இப்போதே சொல்கிறேன். நமது சர்க்காரே தொழிற்சாலைகளை எடுத்து நடத்துவதன் மூலமாக, பஸ்களை எடுத்து நடத்துவதன் மூலமாக, பெரிய தொழில்களை நடத்தக்கூடிய அவர்களுக்கும் வரம்பு கட்டுவதன் மூலமாக, எந்த விதத்தில் வருமானத்தைக் கண்டுபிடிக்க முடியுமோ அந்த அளவு வருவாய் தேடவேண்டும். அதற்கு முயற்சி செய்ய வேண்டும். அதற்குமேல் வரியை போடாதே என்று நாங்கள் சொல்லவில்லை. சிட்டுக் குருவியின் தலையில் சுண்டக்காயை வையுங்கள், யானைத் தலையில் பாறாங்கல்லை வையுங்கள் என்றுதான் நாங்கள் சொல்கிறோம். சிட்டுக் குருவி தலையில் பாறாங்கல்லை வைத்தால் அது சட்னியாய்விடும். யானைத்தலையில் சுண்டக் காயை வைக்கவேண்டாம் என்றுதான் நாங்கள் சொல்கிறோம். தேர்தலுக்குப் பிறகு என்ன சொல்வார்கள் என்று தெரியும்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பார்த்தோம். அமுகும் பொருள் வியாபாரிகள் தேர்தலின் போது ஏன் காங்கிரசை எதிர்த் தார்கள்? சர்க்கார் சிப்பந்திகள் ஏன் காங்கிரசை எதிர்த்தார் கள்? எந்த அளவு விலைவாசி உயர்ந்து கொண்டு போகிறது என்று அவர்களுக்குத் தெரியும். ஆகவே, உற்பத்தியைப் பெருக்கிவிட்டோம் என்று சொன்னல் போதாது. விலைவாசியைக் கட்டுப்படுத்த வேண்டும். விவசாய அபிவிருத்திக்காக உறவு முறை சரியான முறையில் இருக்கச் செய்யவேண்டும். தொழில் அபிவிருத்தி என்று பேச்சளவில் சொல்லிவிட்டால் போதாது. கூடுமானவரை கன இயந்திரத் தொழிற்சாலைகளையெல்லாம் சர்க் காரே எடுத்து நடத்தவேண்டுமென்றுதான் இந்த நேரத்தில் நான் சொல்கிறேன். எல்லாவற்றையும் எடுத்துக்கொள்ளவேண்டு மென்று நான் சொல்லவில்லை. எல்லாமே தேசியமயமாக வேண்டு மென்று நான் சொல்லவில்லை. பிரான்ஸ் நாட்டை உதாரணமாக அமைச்சர் அவர்கள் சொன்னர்கள். அது ஏகாதிபத்திய நாட் டைச் சேர்ந்தது. அங்கே திடீர் திடீர் என்று மந்திரிசபை கவிழ்ந்துகொண்டே இருக்கிறது. அங்கே பொருளாதாரத் துறை யில் எவ்வளவு முன்னேறியிருக்கிறது என்று சொன்னர்கள். இங்கே ஒரு சர்க்காரை இன்னொரு சர்க்கார் அதாவது மத்திய சர்க்காரே—கவிழ்க்கக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். அங்கே அப்படி அல்ல. அங்கே மக்கள் சபை யிலே மக்களே மந்திரி சபையைக் கவிழ்த்து விடுகிறார்கள். அதைவிட இன்னும் சிறிய நாடாக இருக்கும் க்யூபா நாட்டிலே கூட எந்த அளவு தொழில்கள் தேசியமயமாகிறது என்பதைப் பார்க்கிறோம். சிலோனில் ஒரு பெண் பிள்ளை பிரதம மந்திரியாக

[Sri V. K. Kothandaraman] [9th November 1961

வந்தவுடனே எந்த அளவு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது, அதற்கான திட்டங்கள் தீட்டக்கூடிய நிலைமை இருக்கிறது என்பதைப் பார்க்கிறோம். இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்கின்றேன். வணக்கம்.

5·00 p.m. DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8–30 a.m. tomorrow. The House then adjourned.

## VII.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### A. *Statutory Rules and Orders.*

365. *Notification issued with G.O.* 2617, *Revenue, dated* 27*th June* 1961 *regarding amendments to the Madras General Sales Tax Rules*, 1959, *published with Revenue Department Notification S.R.O. No. A*-1941 *of* 1959, *dated* 28*th March* 1959, *at Pages* 232–280 *of the Rules Supplement to Part I of the* Fort St. George Gazette, *dated* 1st *April* 1959. [*Laid on the table of the House under section* 53 (5) *of the Madras General Sales Tax Act*, 1959 (*Madras Act I of* 1959).]

366. *Notification issued with G.O. No.* 3534, *Revenue, dated* 19*th August* 1961, *exempting the religious institutions, the annual income of which is less than two hundred rupees, from the payment of contribution under sub-section* (1) *of section* 92 *of the Madras Hindu Religious and Charitable Endowments Act*, 1959. [*Laid on the table of the House under section* 116 (3) *of the Madras Hindu Religious and Charitable Endowments Act*, 1959 (*Madras Act* 22 *of* 1959).]

367. *Notification issued with G.O. No.* 2947, *Revenue, dated* 17*th July* 1961, *regarding amendments to the headings in the forms issued under the Madras Entertainment Tax Rules*, 1939. [*Laid on the table of the House under section* 16 (4) *of the Madras* (*Entertainments Tax Act*, 1939) (*Madras Act X of* 1939).]

368. *Notification issued with G.O. No.* 1066, *Rural Development and Local Administration, dated* 12*th April* 1961, *under section* 7 (3) *of the Madras Panchayats Act*, 1958, *regarding declaration of Panchayats Development Block and constitution of third batch of Panchayat Unions in South Cuddalore Development District.* [*Laid on the table of the House under section* 179 (4) *of the Madras Panchayats Act*, 1959 (*Madras Act XXXV of* 1958).]

369. *Notification issued with G.O. No.* 1056, *Rural Development and Local Administration, dated* 12*th April* 1961, *under section* 7 (3) *of the Madras Panchayats Act*, 1958, *regarding declaration of Panchayats Development Blocks and constitution of third batch of Panchayat Unions in Chingleput Development District.* [*Laid on the table of the House under section* 179 (4) *of the Madras Panchayats Act*, 1958 (*Madras Act XXXV of* 1958.)]